நியூடெக்ஸ் — பாம்பே டையிங் அளிக்கும் இந்த புதுமையான டவல் 'சூபர்லூப்' உடையதானதால் வெகு சீக்கிரம் உலர்ந்து விடுகிறது.

# இதோ ஒரு புதுமையான பெரிய டவல்!

நியூடெக்ஸ் டவல்கள் பெரியவையாக இருப்பதுடன் மென்மையாகவும், மெத்தென்றுமிருக்கின்றன. இவை 'சூபர்லூப்' முறையில் தயாரிக்கப்படுவதனால், உடலை மென்மையுடன் தழுவி ஈரத்தை அறவே உறிஞ்சி விடுகின்றன. நெய்யப்பட்ட அழகான டிஸைன்கள் கொண்ட இந்த டவல்கள் பல கண்கவர் வர்ணங்களில் கிடைக்கின்றன. இவை நீடித்து உழைக்கின்றன.

**'சூபர்லூப்' டவல்களின் தனிச் சிறப்பென்ன?**



நியூடெக்ஸ் டவலை உற்றுக் கவனித்தால் அதில் ஆயிரக்கணக்கான சூபர்லூப்களைக் காண்பீர்கள். இவற்றின் பயனாகத்தான் டவல் மெத்தென்றிருப்பதுடன் ஈரத்தை வெகுசீக்கிரம் நன்றாக உறிஞ்சி விடுகிறது...வெகு சீக்கிரம் உலர்ந்துவிடுகிறது.

BD-6022 **நியூடெக்ஸ் — பாம்பே டையிங்** அளிக்கும் 'சூபர்லூப்' கொண்ட புதுமை டவல்

# E.I.D.-PARRY IN THE FIELD

*It is generally realised that the ultimate solution of the country's food problem lies in the proper use of balanced fertilisers and the E.I.D. Parry Group is proud of its record as the leader in the fertiliser field over the last 63 years. The E.I.D. Parry Group was the first to manufacture bone super, super-phosphate and compound fertilisers in the private sector. Factories are in full production at Ennore, Tadepalli and Ranipet, and mixing centres are operated throughout the States of Madras, Andhra, Mysore, Kerala, Maharashtra and Gujarat. The Group is also a partner in the vast project of Coromandel Fertilisers Ltd. at Visakhapatnam.*

*In 1963-64, the Group sold over a quarter million tonnes of fertilisers; it confidently hopes to double the sales in the next three years.*

*The E.I.D. Parry Group has the unique distinction of being called "The Fertiliser Co." in the rural areas and "The Confectionery Co." in the urban areas. The Group not only leads in the fertiliser and confectionery fields, but also in the manufacture and sale of sugar, pottery, sanitaryware, fungicides and a large number of other products.*

*Today, the E.I.D Parry Group, fondly known as "Parrys", is one of the larger companies in India, consisting of 9 subsidiary and associated concerns providing employment for more than 10,000 people.*

E.I.D.-PARRY LTD.

*179 years young and still growing.*



E.I.D. PARRY LIMITED
Dare House, Madras 1

SUGAR ● CONFECTIONERY
FERTILISERS ● FUNGICIDES
POTTERY ● SANITARYWARE
AGENCIES

FOS EID 512 A

உங்கள் பொலிவுக்கு...
கண்டோர் வியக்கும் கவர்ச்சி தரும்

# கோ-ஆப்டெக்ஸ்

கைத்தறி துணிகள்

கவர்ச்சி மிக்கவை
கண் நிறைந்த வண்ணங்கள்
விதவிதமான
புதுமை ததும்பும்
நவீன டிஸைன்கள்.

எல்லா "கோ-ஆப்டெக்ஸ்"
விற்பனை நிலையங்களிலும்
கிடைக்கும்.

தமிழ்நாடு கைத்தறி
நெசவாளர்
கூட்டுறவு சங்கம் லிட்.,
'பரவகந்தாம் கட்டிடம்'
எழும்பூர், சென்னை-8



ELEGANT

# கல்கி

## நினைவுத்திரையில்.....

முன்னொரு காலத்தில் தேவலோகத்தில் ஒரு கேள்வி எழுந்தது. ஒரு பொய்கூடச் சொல்லாதவன் அரிச்சந்திரன்; தனது வாழ்க்கையில் ஓர் உண்மைகூடச் சொல்லாதவன் யார்? மூவுலகச் சரித்திரத்திலும் அத்தகைய பெரியார் ஒருவர்கூட ஜனித்ததாகத் தெரியவில்லை. இச்சமயத்தில் திருவாளர் சைத்தான் தோன்றி 'என்னை மறந்து விட்டீர்களா? என்னுடைய வாழ்க்கையில் உண்மை என்ற வார்த்தைக்கே இடமில்லை தெரியுமா?' என்று கர்ஜித்தார். 'தாங்கள் சொல்வது சென்ற நிமிஷம் வரை சரி. ஆனால் இப்போது நீங்கள் ஓர் உண்மையைச் சொல்லி விட்டீர்களே' என்று சபையோர் கூறவே சைத்தான் தாம் செய்த பெரும் தவறுக்காக வருந்தினார். ஒரு உண்மை கூடச் சொல்லாத தனிப் பெருமைக்கு இனி பாகிஸ்தான் வெளி நாட்டு மந்திரி சர் ஜபருல்லா கான்தான் உரியவர் என்றும் திருவாளர் சைத்தான் வேண்டா வெறுப்பாக ஒப்புக்கொண்டதைச் சபையோரும் அங்கீகரித்தனர்.

"பாகிஸ்தான் பொம்மலாட்டம்"

தலையங்கம், கல்கி, மே 15, 1949

## பொருளடக்கம்

பிலவங்க, ஆனி, 32 ※ ஜூலை 16



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

இலங்கையில் 40 சதம் தபால் செலவு தனி



விமானங்கள்




"கவலைப் படாதே!
நெருக்கடி
உருவாகும் போதுதான்
இதைப் பயன் படுத்துவேன்"
சாவன்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 50

# தீ அணையட்டும்; தீமை அழியட்டும்

நூற்றுப் பத்து டிகிரி வெய்யிலிலிருந்து விடுதலை கிடைத்ததே என்று நிம்மதி பெற்ற சென்னை வாழ் குடிசை மக்களை அக்கினி பகவான் பயங்கரமாகச் சோதித்து வருகிறான். ஒரு சில தினங்களுக்குள் சிறியதும் பெரியதுமாகப் பல தீ விபத்துக்கள் நேர்ந்து நூற்றுக் கணக்கான குடிசைகள் சாம்பராகிவிட்டன. ஆயிரக்கணக்கான ஏழை மக்கள் வீடிழந்து நிற்கிறார்கள். பதினாயிரக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள பொருட்கள் சேதமாகியுள்ளன.

குடிசையில் வாழும் ஏழை மக்களுக்கு மீண்டும் மீண்டும் துயரம் வந்து சேருவதை எண்ணும்போது நம் உள்ளம் உருகுகிறது. மேலும் மேலும் வாழ்வும் வளமும் பெற வேண்டியவர்கள், இருக்கின்ற எளிய வாழ்வையும் அற்பமான வளத்தையும் கூட இழக்க நேருகின்றதென்றால் அதை எண்ணி நெஞ்சம் கலங்காதிருக்க முடியுமா?

வீடு வாசலையும் துணிமணிகளையும் பொருளையும் இழந்ததோடு இவர்களுடைய துயரம் முடிந்துவிடவில்லை. பீதி என்ற அரக்கனின் வசப்பட்டு இவர்கள் நிலைகுலைந்திருப்பதுதான் இதனிலும் பெரிய துயரம்.

இன்னலுக்கு ஆளான மக்களுக்கு உணவும் உடையும் இருக்கையும் தருவதைப் போலவே தைரியம் தருவதும் மிக முக்கியமான காரியம். குடிசைகளில் வாழப் பயந்து, மக்கள் மயானங்களுக்குக்கூடக் குடி பெயர்கிறார்கள் எனில் அவர்களுடைய நெஞ்சில் தங்களது இருக்கைபற்றி எத்தகைய திகில் இருக்கும் என ஊகிக்கலாம்.

சேரிகள்தோறும் போலீஸ் காவல் போட்டிருப்பது இந்தத் திகிலை ஓரளவு தணிக்கும் என்பது உண்மை. அதோடு மந்திரிமார்களும், சகல கட்சியினரும், பொதுமக்களுக்கு அபயம் கூறி ஆறுதல் தர வேண்டும்.

அதிருஷ்டவசமாக இத்தனை விபத்துக்கள் ஏற்பட்டும் (முண்டகக்கண்ணியம்மன் கோயிலை அடுத்த சேரியில் மூன்று இன்னுயிர்கள் பறிபோனது தவிர) உயிர்ச் சேதம் ஏற்படவில்லை என்பது ஆறுதலுக்குரிய விஷயம்.

அடுத்தடுத்துச் சேரிகளில் மட்டுமே பெரும்பாலும் ஆடவர்கள் தொழிலுக்குச் சென்றிருக்கும் பிற்பகல் நேரத்திலேயே, மையமான இடத்தில் நெருப்புப் பிடித்துக் கொள்வதும், பாஸ்வரம் என நினைக்கத்தக்க நீல ஜ்வாலையுடன் அது எரிந்து பரவத் தொடங்குவதும், பல இடங்களில் விபத்து பற்றி முன்னறிவிப்புச் செய்யப்படுவதும் மக்களின் பீதிக்குக்காரணம். ஆம், நினைக்கவே அவமானமாகவும் அருவருப்பாகவும் ஆத்திரமாகவும்தான் இருக்கிறது: இந்தத் தீவிபத்துக்கள் அகஸ்மாத்தாக ஏற்படாமல், யாரோ சில படுபாதகர்களின் சதித் திட்டத்தால் ஏற்படுகின்றனவோ என்ற ஐயப்பாட்டின்மீதே பீதி எழுந்துள்ளது. ஏழை மக்களை எக் காரணமும் இன்றி இம்சித்துப் பார்க்க விரும்பும் ராட்சதர்கள் நம் மண்ணில் இருப்பார்கள் என்று நம்புவது கடினமாகத்தான் இருக்கிறது. எனினும் விபத்துக்களில் காணப்படும் ஒரே போன்ற தன்மை இந்த ஐயத்தை ஏற்படுத்தவே செய்கின்றது. கட்டுப்பாட்டுக்குப் பெயரெடுத்த முதலமைச்சரும், உயர்போலீஸ் அதிகாரிகளுமே தமது சந்தேகத்தை வெளிப்படக் கூறியிருக்கிறார்களே!

விபத்தை நீக்குவதில் தீயணைப்புப் படையினர் எவ்வளவு தீவிரம் காட்டுகின்றனரோ, கஷ்ட நிவாரணம் அளிப்பதில் அரசும் மாநகராட்சியும் சமூகப் பணி நிலையங்களும் பொது மக்களும் எவ்வளவு தீவிரம் காட்டுகின்றனரோ, அதே அளவுக்கு மக்களின் பீதியைக் களைவதிலும் போலீஸார் தீவிரமாகப் பணியாற்றி வருகின்றனர்.

'தீ விபத்துக்கள் சதிச்செயலாக இருப்பின், அவற்றுக்குக் காரணமானவர்களைக் கடுமையாகத் தண்டிப்போம்' என்று முதல்வர் கூறியுள்ளார். இத்தகைய

கொடும் பாவச் செயலில் இனியொருவர் ஈடுபடாத வண்ணம், தண்டனை கடுமையாக இருக்கவேண்டியது அவசியம் என்பதை அனைவரும் ஒப்புவர். எனினும், தண்டனையால் மட்டும் மன இயல்பை மாற்றிவிட முடியாது. மனித உருவில் நடமாடும் அரக்கர்களின் மனத்தை மாற்றுவதற்கு நமது சக்தி போதாது. ஆண்டவன்தான் அவர்களை மனிதர்களாக்க வேண்டும். தீயை அணைக்கும் போதே, தீய எண்ணத்தையும் அணைக்குமாறு ஆண்டவனைப் பிரார்த்திப்போம். தீ அணைய நாம் பௌதிகமாக முயற்சி செய்து வெற்றி பெறலாம். தீமை அழிய அவன் அருள் இன்றி வழி இல்லை.

## புனர் வாழ்வு – ஒரு யோசனை

தீ விபத்துக்களுக்கு உள்ளானோருக்குப் புனர்வாழ்வளிக்கும் போது ஒரு முக்கியமான அம்சத்தைக் கவனிக்க வேண்டும். சென்னையில் சேரிகள் அனைத்தையும் அப்புறப்படுத்திக் கல் கட்டிடங்களைக் கட்டித் தர வேண்டும் என்பது அரசாங்கத்தின் இறுதி நோக்கமாயிருப்பினும், நடைமுறையில் நீண்டகாலத்துக்குக் குடிசைகள் இருந்தே தீரும். இப்போது பல புதிய குடிசைகள் அமைத்துத் தந்தாக வேண்டும். இவற்றிலெல்லாம் தீப்பிடிக்காத காப்புப் பண்டங்களை உபயோகிப்பது குறித்து யோசனை செலுத்த வேண்டும். குறைந்த செலவில் கரையான், நெருப்பு ஆகியவற்றிலிருந்து காப்புத் தரும் பொருட்களை வன ஆராய்ச்சி நிலையத்தார் கண்டுபிடித்திருப்பதாக 'ஹிந்து'ப் பத்திரிகையில் நேயர் ஒருவர் எழுதியுள்ளார். பழைய குடிசைகளில் இவற்றை எப்படிப் பயன்படுத்திக் கொள்ள முடியும் என்பதை ஆராய வேண்டும். புதிய குடிசைகளில் இவற்றை உபயோகிப்பதிலும் கவனம் செலுத்த வேண்டும். புதிதாகக் குடிசை வேய்ந்து கொள்பவர்களுக்குப் பணமாக உதவி செய்யாமல், பொருட்களையே தர வேண்டும் என்று பிரமுகர் ஒருவர் கூறியுள்ள ஆலோசனை வரவேற்கத் தக்கது. அந்தப் பொருட்களில் நெருப்புத் தடுப்புக்கான பண்டங்களையும் சேர்த்துக் கொள்வது அவசியம்.

## நிராகரிக்கவா நிபுணர் அறிக்கை?

அரசாங்கம் அவ்வப்போது கமிட்டிகளை நியமிக்கும் போது குறிப்பிட்ட விஷயங்களில் தனது கருத்துக்களை மனத்தில் கொண்டு கமிட்டி அங்கத்தினர்களையும் அவற்றின் தலைவர்களையும் மிகுந்த ஜாக்கிரதையுடன் தேர்ந்தெடுத்து நியமிக்கிறது. பிறகு இக்கமிட்டிகள் ஏராளமான காலமும் பணமும் செலவழித்துப் புள்ளி விவரங்கள் சேகரித்து, பல்வேறு அபிப்பிராயங்களை அலசி நோக்கி முடிவுகள் எடுக்கின்றன. ஆனால் இந்த முடிவுகளும் சிபாரிசுகளும் அரசாங்கத்தின் எண்ணத்துக்கு இசைவாக இல்லை என்றால் அது இவற்றை அலட்சியமாக ஒதுக்கித் தள்ளி விடுகிறது.

அகில இந்திய ரேடியோ கட்சிச் சார்பற்றுத் தனித்தியங்கும் கார்ப்பொரேஷனாக உருவாவதற்கும், மானேஜிங் ஏஜன்டுகள், பங்குதாரர்களின் பணத்தை அரசியல் கட்சிகளுக்கு அள்ளிக் கொடுப்பதைத் தடுப்பதற்கும் சட்டங்கள் இயற்றப்படும் என்ற நம்பிக்கை ஏற்படவில்லை. ஆட்சியின் உயர் மட்டத்தில் மாற்றங்கள் உண்டாகி, காங்கிரஸ் கட்சியினர் பிறர் தங்களை நோக்குவது போலத் தங்களைத் தாங்களே பார்த்துக் கொள்ளும் சக்தி பெற்றாலன்றி மேற்சொன்ன காரியங்கள் நிகழ வழியில்லை. அகில இந்திய ரேடியோ பற்றி சந்தா கமிட்டி சமர்ப்பித்த அறிக்கை நிராகரிக்கப்பட்டுக் கிடக்கிறது. கம்பெனிகள் அரசியல் கட்சிகளுக்கு நன்கொடைகள் அளிப்பது பற்றி சந்தானம் கமிட்டி சமர்ப்பித்த அறிக்கையும் நிராகரிக்கப்பட்டுக் கிடக்கிறது.

## சர்க்கார் நடத்தும் தொழில்கள்

ருஷிய உதவி பெற்ற சென்னை ரணசிகிச்சைக் கருவித் தொழிற்சாலை இரண்டாண்டுகளாக நடந்து வருகிறது. இத்தொழிற்சாலைக் கிடங்கில் விற்பனையாகாத சரக்குகள் குவிந்து வருகின்றன. ஐம்பத்து ஐந்து லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள சரக்குகள் உற்பத்தியாகி இருப்பினும் இரண்டு லட்சம் ரூபாய் மதிப்புள்ள சரக்குகளே விற்பனையாகியுள்ளன. ஆண்டுதோறும் 108 இனங்களில் இருபத்தைந்து லட்சம் கருவிகள் தயாரிப்பதற்காக இத்தொழிற்சாலை அமைக்கப்பட்டிருக்கிறது. (அவ்வளவு பெரிய அளவுக்கு மூலதனம் செலவழிக்கப்பட்டிருக்கிறது.) ஆனால் கருவிகள் விற்பனையாகாமல் குவிவதால் உற்பத்தியளவு கடந்த சில மாதங்களாகக் குறைக்கப்பட்டுள்ளது.

தேசிய நஷ்டமான இத்தொழிற்சாலையில் தயாராகும் கருவிகள் பழங்காலத்து மோஸ்தரில் இருப்பதாலும், அவற்றின் விலை மிகவும் உயர்வாக இருப்பதாலும்தான் அவை விற்பனையாவதில்லை என்று ஓர் அநுபவம் வாய்ந்த ஸர்ஜன் தெரிவித்திருக்கிறார்.

சர்க்கார் நடத்தும் தொழில்களின் நிலைமை பற்றி மீண்டும் மீண்டும் இதே போல் பல உதாரணங்கள் கண்டு விட்டோம். இதன் படிப்பினை தெளிவானது.

# ராஜாஜியின் கருத்துக்கள்

கைராட்டை — தக்ளி இயக்கத்தை அரசாங்கம் நிர்வகித்த முறையினால் ஏராளமான தரக் குறைவான நூல் உபயோகப்படுத்தப்படாமல் தேங்கிக் கிடந்தால், அதனை ஆலைகளில் தயாரான நூலோடு சேர்த்துப் பயன்படுத்துவதில் தவறில்லை. ஆனால் இந்தப் புது ரகத் துணியைக் கதர் என்று அழைக்கலாகாது. ஆலை நூலும் ராட்டை நூலும் இணைந்து தயாரான இந்தத் துணிக்குப் புதுப் பெயர் சூட்ட வேண்டும். தரக் குறைவான ராட்டை நூல் இரண்டு அல்லது மூன்றினைச் சேர்த்து முறுக்கினால் அதைக் கொண்டு நீடித்து உழைக்கக் கூடிய கனமான துணி ரகங்களை உருவாக்கலாம். இதனை அழகாக வெட்டித் தைத்து கனவான்கள் அணியலாம். இதற்கு ஆலை நூலின் உதவி தேவையில்லை.

கைத்தறி நமது முழு ஆதரவையும் பெறுவதற்குரியது. சர்க்காவும் அப்படியே. கதர் துணி வாங்கும் போது நாம் இவை இரண்டுக்குமே ஆதரவு தருகிறோம். கைத்தறித் துணி வாங்கும் போது கைத்தறிக்கு மட்டும் ஆதரவு தருகிறோம்.

இந்தியாவில் அந்தஸ்து உள்ளவர்கள் அனைவரும் காந்திஜியை மதிக்குமுகமாகக் கதர் அணிய வேண்டும். அந்தஸ்துள்ளவர்கள் இந்தக் கௌரவத்தைப் பெற, அதற்குரிய முழுத் தொகையையும் செலுத்தி கதர் வாங்க வேண்டும். அரசாங்கம் பண உதவி செய்து செயற்கையாகக் கதரின் விலையைக் குறைக்க வேண்டும் என்று கோரக் கூடாது. கதரை அரசாங்கம் வாங்கி அதனை அடிமட்ட ஊழியர்களின் தலையில் கட்டக் கூடாது. கீழ் மட்டத்தில் உள்ளவர்களின் அடையாளக் குறியாக அது மதிப்பிழந்து விடலாகாது. தேசத்தில் அந்தஸ்துள்ளவர்கள் என்று தங்களைக் கருதுவோரும் தங்களுக்குள்ள அரசியல் சுதந்திரத்தில் பெருமிதம் கொள்வோரும் கதரை அணிவதைக் கௌரவமாகக் கருதி ஏற்க வேண்டும்.

முழுக்க முழுக்க காந்திஜியாலேயே நூற்கப்பட்ட நூலைக் கொண்டு ஒரு துணி நெய்யப்பட்டிருந்தால் அதனை ஒரு விலை மதிப்பற்ற தேசிய சொத்தாகக் கருதிப் போற்றிப் பாதுகாக்க மாட்டோமா? கதர் துணி எல்லாமே காந்திஜி நூற்ற நூலினால் நெய்யப்பட்டதாக நாம் கருத வேண்டும். ராணுவச் சிப்பாய்கள் அடையும் வெற்றிகள் தளபதியின் வெற்றிகளாகக் கருதப்படுவது போல, கையால் நூற்கப்பட்ட நூல் எதுவானாலும் அதைக் காந்திஜி நூற்றதாகவே கருத வேண்டும். கதரை நமது தேசிய பரம்பரைச் சொத்தாகக் கருதிப் போற்றுவோம்; பொருளாதாரக் குழப்பத்தில் அதனை ஈடுபடுத்திக் இழிக்காதிருப்போம்.

கதரை அணிபவர்கள் அனைவரும் உண்மையான காந்தீயவாதிகளாக இல்லை என்பதற்காகக் கதர் அணிவதை விடலாமா? நாட்டில் உள்ள எல்லா மோசடிக்காரர்களும் ஹிந்துக்களாய் இருந்து, ''சிவாய நம'' ''நாராயண ஓம்'' என்னும் மந்திரங்களை உச்சரிக்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அதற்காக நான் அம் மந்திரங்களைக் கூறாது விடமாட்டேன்; அவற்றையே நானும் சொல்லிக் கொண்டுதான் இருப்பேன்.

***

பூமி மட்டத்துக்கு மேலே அணுச் சோதனைகள் நடத்துவதில்லை என்ற மாஸ்கோ உடன்படிக்கையில் சேர சீனா மறுக்கிறது. இது வரை சீனா ஏழு அணு, ஹைட்ரஜன் குண்டுகளை வெடித்து உலகின் வாயு மண்டலத்திலும் நீரிலும் 'விஷம்' பரவச் செய்திருக்கிறது. சீனாவைப் புறக்கணித்து ஒதுக்கித் தள்ள இதைவிட வேறு காரணம் தேவையே இல்லை. ஆனால் இத்துடன் இந்திய தூதரக உத்தியோகஸ்தர்களிடம் அது நடந்து கொண்ட விதத்தையும் நமது தூதரகத்தில் உள்ளவர்களின் நடமாட்டத்துக்கு அது விதித்துள்ள தடையையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். சீனாவுடன் ராஜரீகத் தொடர்புகளை இன்னமும் நாம் வைத்துக் கொண்டிருப்பதால் ஒரு பயனுமில்லை என்பதோடு, சொல்லி முடியாத அவமானம் வேறு நம்மை வந்து அடைகிறது. இந்திய அரசாங்கம் பயப்படுவதையே வழக்கமாகக் கொண்டு விட்டது. இதை அது உதறித் தள்ள வேண்டும். அணுகுண்டு மட்டுமே ஒரு நாட்டு மக்களைப் பலமிக்கவர்களாகவோ அல்லது போற்றுதலுக்குரியவர்களாகவோ ஆக்கி விடாது. சீனாவின் உள்நாட்டு நிலவரம் வேவு பார்ப்பதற்கு ஏதும் இடமின்றி இப்போது வெட்டவெளிச்சமாகியுள்ளது. சீனாவைக் குறித்து நாம் பயப்பட வேண்டியது இல்லை. சமீப காலம்வரை சீனாவுடன் நெருங்கி உறவாடிய பாகிஸ்தான்கூட இப்போது தன்னை விடுவித்துக் கொண்டு வருகிறது. ஜெனரல் அயூப்கான் இந்தியாவின்பால் நல்லெண்ணம் கொண்டு நடந்து கொள்ளும் பான்மை, புதுதில்லியில் உள்ள மதிப்புக்குரிய தலைவர்களின் கவனத்துக்கு உரியது.

***

முன்னாள் மன்னர்களுக்கு ராஜ மானியம் தருவதாக அரசியல் சாஸனபூர்வமாக வாக்குத் தத்தம் தரப்பட்டுள்ளது. இதை ரத்து செய்துவிட வேண்டும் என்பது அகில இந்திய காங்கிரஸின் தீர்மானங்களில் ஒன்று. இத்தேசத்தின் ஆட்சியதிகாரம் பிரிட்டிஷாரிடமிருந்து நம்மிடம் மாற்றப்பட்ட போது செய்து கொண்ட உடன்படிக்கையை இப்போது முறிப்பது தார்மீக ரீதியில் ஒரு குற்றமே என்று இந்தியாவின் நற்பெயரில் நாட்டமுள்ள எவரும் உணருவர். கொடுத்த வாக்கைக் காப்பது நம் கடமை. நடைமுறைக்கும் அதுவே அநுகூலமானது. முன்பே இந்திய சமஸ்தான அதிபதிகளுடன் ராஜமானியம் தருவதாக டொமினியன் சர்க்கார் உடன்படிக்கை செய்து கொண்டிருந்தால் அந்த மானியத் தொகையை இந்திய சர்க்காரின் கூட்டு நிதியிலிருந்து தர வேண்

டும் என்றும், இந்தத் தொகை வருமான வரியிலிருந்து விலக்குப் பெற்றது என்றும் நமது சாஸனத்தின் 291வது பிரிவு கூறுகிறது. மத்திய சர்க்காரும், ராஜ்ய சர்க்காரும் சட்டம் செய்யும் போதும், நிர்வாக அதிகாரங்களைப் பிரயோகிக்கும் போதும் பழைய மன்னர்களுடன் முன்பே செய்து கொண்ட உடன்படிக்கைகளுக்கு உரிய மதிப்புத் தர வேண்டும் என்று சாஸனத்தின் 362வது பிரிவு கூறுகிறது. இவை முன்னாள் மன்னர்களுக்குக் காங்கிரஸ் கட்சி அளித்த வாக்குறுதிகளை வலியுறுத்துபவை. இந்த வாக்குறுதிகளைப் பெற்றதனாலேயே அம்மன்னர்கள் தங்கள் ஆளுகையின் கீழிருந்த இந்தியாவின் பகுதிகள் சுதந்திரம் பெற உதவி புரிந்தனர்.

இப்போது காங்கிரஸ்காரர்கள் சாஸனத்தைத் திருத்தி, ராஜ மானியத்தை நிறுத்தி விட வேண்டும் என்கின்றனர். இது சாஸனத்தை எப்படித் திருத்த வேண்டும் என்கிற பிரச்னையல்ல. இந்திய சர்க்காரின் நாணயத்தை எப்படிக் காப்பாற்ற வேண்டும் என்பதே பிரச்னை. பழைய நிதி உடன்படிக்கைகளை மதிக்காவிடில் உலக அரங்கில் கடனாளித் தேசமாக நிற்கும் இந்தியாவுக்குப் பாதகமான விளைவுகள் ஏற்படும். கெட்ட பெயர் நிச்சயம் உண்டாகும்.

மகாத்மா காந்தியும், சர்தார் வல்லப பாய் படேலும் இன்று உயிரோடிருப்பின் என்ன சொல்வார்கள்? நிச்சயமாக வாக்குறுதிகளை மீறுவதை எதிர்ப்பார்கள். நேரடியாகவோ மறைமுகமாகவோ ராஜமானியம் பற்றியும் நஷ்டஈடு பற்றியும் பார்லிமென்டில் கேள்வி எழுப்பப்பட்ட போதெல்லாம் படேல் அவர்கள் இவ்வாக்குறுதிகளைத் தீவிர உணர்வோடு வலியுறுத்தியுள்ளார். ராஜமானியம் அளிப்பது சாஸனத்தின் ஷரத்துக்களால் மட்டும் ஏற்பட்ட பொறுப்பல்ல; வாக்குத் தத்தம் செய்ததாலும் ஏற்பட்ட பொறுப்பு அது. சாஸனத்தை மாற்றி விடலாம். ஆனால் சத்தியப் பிரமாணத்தை மாற்ற முடியாது.

***

மத்திய கிழக்கில் ஏற்பட்ட யுத்தம் மற்றொரு பிரச்னை குறித்த விவாதத்தைத் தீவிரமாக்கியிருக்கிறது என்கிறது ஜெர்மன் டிரைப்யூன் பத்திரிகை. வல்லரசுகள் சிறிய நாடுகளுக்கு அளிக்கும் உத்தரவாதங்கள் பற்றிய விவாதம்தான் இது. ஜெனிவாவில் பேச்சு வார்த்தைகள் நடத்தும் பல்வேறு நாட்டுப் பிரதிநிதிகள் நிலைமையைப் பின் வருமாறு பார்க்கிறார்கள்: வல்லரசுகளின் நலன்கள் பாதிக்கப்படலாம் என்னும் நிலைமை உருவாகும் போது அவர்கள் அளித்த உத்தரவாதங்களுக்கு மதிப்பு ஏதேனும் இருக்கின்றதா? அரசாங்கத் தலைமைப் பீடத்துக்கு அறிவுரை வழங்குபவர்கள் சென்ற மே மாதம் ஏகமனதாக ஒரு முடிவுக்கு வந்தார்கள். நிகழ்ச்சி நிரலிலிருந்து, "சிறு நாடுகளுக்கு வல்லரசுகள் கொடுக்கும் உத்தரவாதம்" என்ற தலைப்பில் உள்ள அம்சத்தை நீக்குவதுதான் அந்த முடிவு. காரணம் இத்தகைய உத்தரவாதங்கள் அவசியத் தேவையான சந்தர்ப்பங்களில் நிறைவேற்றப்படுவதில்லை என்பதுதான்.

***

இந்தியாவின் ஜனநெரிசல் காரணமாகக் குடும்பக் கட்டுப்பாடு பற்றி நினைப்பவர்கள் கவனத்துக்கு :

ஸ்விட்ஜர்லாந்தில் ஒரு சதுர மைலுக்கான சராசரி ஜனத்தொகை இந்தியாவில் உள்ள அளவே. மேற்கு ஜெர்மனியின் ஜனத்தொகை விகிதம் நம்முடையதைப் போல் இரண்டு மடங்கு. பெல்ஜியம், ஹாலந்து, இங்கிலாந்து இவற்றில் சதுர மைலுக்கான சராசரி மக்கட் தொகை நம் நாட்டிலிருப்பதைப் போல் இரண்டிலிருந்து மூன்று மடங்கு வரையாகும்.

---

## காமகோடியின் கருணைமொழி



உலகத்தில் பச்சையாக ஓர் இலை இருக்கிறது. மஞ்சளாக ஒரு துணி இருக்கிறது. இப்படி அநேகம் வஸ்துக்கள் அநேக வர்ணங்களில் இருக்கின்றன. அந்த வஸ்துக்களில் எதைக் கொண்டு வந்து நெருப்பில் போட்டாலும் அது கரியாகி விடுகிறது. எந்தப் பொருள் எந்த வர்ணமாக இருந்தாலும் கருகிக் கறுப்பாகிவிடுகிறது. 'கறுப்பு' ஒன்றுதான் எல்லாப் பொருட்களுக்கும் ஸ்வபாவ நிறமோ, பாக்கி நிறம் எல்லாம் அவை பூசிக் கொண்ட சாயமோ?' என்று தோன்றுகிறது. ஆனால் 'ஒரு வஸ்துவின் சாயம் கறுத்துப் போயிற்று' என்று சொல்கிறதில்லை வழக்கம். ஏன்? கருகிக் கறுப்பான இந்தப் பண்டங்களையும் இன்னொரு முறை அக்கினியில் ஸ்புடம் போட்டால் அவை அனைத்தும் நீற்றுப் போகின்றன. இப்படி நீறு ஆகிவிட்ட போது எல்லாம் வெளுப்பு. 'சாயம் வெளுத்தும் போய் விடுகிறது!

இந்த உலகமே பலவிதமான சாயங்களைப் பூசிக் கொண்டிருப்பதுதான். அந்தச் சாயங்கள் யாவும் போனபின் எஞ்சியிருப்பது உண்மைப் பொருளான ஒன்றுதான். அதுதான் ஆண்டவன். உண்மை என்பது வெண்மை. நம் உடம்பில் உள்ள பொருளெல்லாம் சாயம், அதில் உண்மையை நிலைப்படுத்திக் கொள்வதற்காக வெண்மையான திருநீற்றைப் பூசச் சொன்னார்கள்.

---

# பஞ்சாமிர்தம்

"கொக்கி"

வங்காளத்தில் இப்போதெல்லாம் சட்ட சபைக்கு உள்ளே மட்டுமல்ல, வெளியே வந்தும் அங்கத்தினர்கள் வாக்குப் போரிலிருந்து அடிதடிச் சண்டை வரையில் பலவித மோதல்களில் ஈடுபடத் தொடங்கி விட்டார்கள். எம். எல். ஏ. ஒருவரை வேறு சில எம்.எல்.ஏ.க்கள் தெருவில் தரதர வென்று



இழுத்துக் கொண்டு சென்று அவருடைய ஆடைகளைக் கிழித்துப் போட்டு அமளி செய்தார்கள்.

"இதென்ன தெருவா? அல்லது சட்ட சபையா?" என்று அந்தத் தெருவாசிகளில் யாராவது ஒருவர் அந்த எம். எல்.ஏ.க்களைப் பார்த்துக் கேட்டிருந்தாலும் ஆச்சரிய மில்லை!

ஃ ஃ ஃ

இஸ்ரேல் படைகளிடம் தோல்வியடைந்த ஜோர்டான் நாட்டு மன்னர் தமது தோல்வியைப் பெருமையுடன் ஒப்புக் கொண்டிருக்கும் பெருந்தன்மையைப் பாருங்கள். இஸ்ரேல் வீரர்களின் சாகஸத்தை அவர் குறிப்பிடும்போது, "பிரிட்டிஷ் அமெரிக்க



உதவி பெற்றுத்தான் இஸ்ரேலியர்கள் போரிட்டதாகச் சில அரபு நாடுகள் கூறுவது சுத்தத் தவறாகும். தன்னந் தனியாகத்தான் அவர்கள் போரிட்டார்கள். ஜோர்டானியத் துருப்புக்களை வென்றிருக்கிறார்கள்! இதில் சந்தேகமில்லை!" என்று சொல்லி இஸ்ரேலியரின் தீரத்தைப் பெருந் தன்மையுடன் ஒப்புக் கொண்டிருக்கிறார். நேர்மையுடன் தோல்வியை ஒப்புக் கொள்வதே ஒரு வீரமாகும். ஜோர்டான் மன்னன் இந்த விதத்திலும் மன்னன்தான்.

ஃ ஃ ஃ

புதிய ரூபாய் நோட்டுக்களின் அளவு சிறிதாக்கப் பட்டிருக்கின்றது அல்லவா? இதன் பயனாக அரசாங்கத்துக்கு முந்நூறு டன் காகிதம் மிச்சம் ஏற்பட்டிருப்பதாக லோக சபையில் உதவி நிதிமந்திரி அறிவித்திருக்கிறார். "ரூபாயின் மதிப்பு அது அச்சடிக்கப் பட்டுள்ள காகிதத்தின் மதிப்பு அளவுக்



காவது இருக்கும் என்று நினைத்தோம்; இனி அதுவும் இராது போலிருக்கிறதே!" என்று ஒருவர் அங்கலாய்க்கும் போதே, "ரூபாயின் மதிப்பு மேலும் இறங்குமுன், இப்போதே 'பழைய பேப்பர்க்காரரை' அழைத்து வந்து அவற்றைப் போட்டு விடலாம். நல்ல விலையும் கிடைக்கும்!" என்று சிபாரிசு செய்கிறார் வேறொருவர்.

ஃ ஃ ஃ

"சென்னை பஸ் ஒன்றில் டிரான்ஸிஸ்டர் ரேடியோ ஒன்றை யாரோ மறந்து போட்டு விட்டுச் சென்றிருக்கிறார்கள்." — அரசாங்கப் போக்குவரத்துத் துறை அறிவிப்பு.



அது அவருடைய பக்கத்து வீட்டுக்காரரின் அலறும் ரேடியோவாக இருக்குமோ?






"அடேடே! கண்ணைவிதேவியாரா? ஏது? சென்னையம்பதிப் பக்கம் விஜயம் செய்திருக்கிறீர்கள்?"

"வாயுபுத்திரரா? வணக்கம்! வணக்கம்! நிச்சயமாக இந்த இடம் லங்காபுரியில்லை! ஆனாலும் உங்களை இங்கே பார்க்கிறேனே! எப்படி?"

"தேவியாரே! மதுரையம்பதிப் பாண்டியன் இந்தப் பட்டணத்துக்குள் வந்து புகுந்து விட்டானா?"

"மனம் விட்டுப் பேசுங்களேன்! இந்தச் சென்னையம்பதியில் இப்போது திடீர் திடீரென்று எழும் அக்கினிச் சுவாலைகளுக்கும், எனக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. நான் அகஸ்மாத்தாகத்தான் வந்தேன்."

"நன்று!.... தேவியார், என்னையும் சந்தேகக் கண்களோடு பார்க்க வேண்டாம்!.... லங்காபுரியில் மாட மாளிகைகள் கூட கோபுரங்கள் இருந்தனவே தவிர இப்படிக் குப்பங்களும் குடிசைகளும் இல்லை!"

"நாம் இருவரும் இங்கு நிற்பது அவ்வளவு நல்லதல்ல. வெளியூர்க்காரர்கள்! அதோ யாரோ நம்மைக் கவனிக்கிறார்கள்! சந்தேகப்பட்டு நம்மைச் சித்திரவதைக்கு உள்ளாக்கி விடுவார்கள்!"

"நன்றாய்ச் சொன்னீர்கள்! வாருங்கள், போகலாம்."

ஃ ஃ ஃ

காய்கறி விற்பவர்கள், மாம்பழக் கூடைக்காரர்கள், சில்லறை வியாபாரிகள் எல்லாரும் அன்றாடம் தங்கள் வியாபாரத்தை ஆரம்பிக்கும் வேளையில் 'போணி பண்ணப்பா உன் நல்ல கையாலே!' என்று வாடிக்கைக்காரர்களைப் பார்த்துச் சொல்வார்கள்! வியாபாரம் தீவிரமாக நடந்து சரக்குச் சீக்கிரம் தீர்ந்து காசைப் பார்க்க வேண்டுமே என்ற ஆர்வமும் ஆவலும் அவர்களுக்கு!

இதே போல் ஜூலை முதல் தேதி பிற்பகல் மூன்று மணி அளவுக்குத் தேனாம்பேட்டைப் பகுதியில் 'போணி'யான தீ வைப்புக்கு எந்தப் புண்ணியவான் கை காரணமோ தெரியவில்லை! தீ வியாபாரம், தீவிரமாகப் பரவி, ஆயிரக்கணக்கான அப்பாவி மக்களை வீடு, பொருள் இழக்க வைத்து நடுத் தெருவில் நிறுத்தி வைத்திருக்கிறது!

சம்ஸ்கிருதக் கல்லூரியிலிருந்து கிழக்காக மைலாப்பூர் உட்பகுதிக்குப் போகும் பக்கத்தில் பக்கிங்காம் கால்வாய்க் கரையோரத்தைப் பார்க்கும்போது, விமானத் தாக்குதலுக்கு ஆளான பகுதி மாதிரி இருக்கிறது. பட்டு நூல் குப்பம் என்ற அந்தப் பகுதியில் பல வீடுகள் பாழாகிக் கிடக்கின்றன; பட்டப் பகலில் பிடித்த தீயின் விளைவாக! மறுநாள் நுங்கம்பாக்கத்துக்கு முகாமிட்டிருந்த அக்கினி பகவான் மீண்டும், இதே பக்கிங்காம் கால்வாயின் மறு பகுதிக்கு அதிகாலையில் விஜயம் செய்தார்! மாலையில் மந்தவெளிக்







குப் போனார். அவருடைய சில்லறை சிஷ்யர்கள், ஆங்காங்கு சில தனிப்பட்ட குடிசைகளுக்கு அதிதிகளாகப் போய் அமர்ந்து கொண்டு அழித்தார்கள்!

ஃ ஃ ஃ

“நேத்துச் சாயங்காலத்திலிருந்தே ராத்திரிக்குத் தீ வைக்கப் போறாங்கன்னு பேச்சு காதிலே விழுந்தது! எல்லாரும் உஷாராயிட்டாங்க. அவங்க, அவங்க நகட்டக்கூடிய சாமான்களைத் தள்ளிக்கிட்டு வந்து பாதையிலும் சாலையிலும் குந்திக்கிட்டு உட்கார்ந்திருக்கோம். வயசுப் பிள்ளைங்க உட்காராமே இந்தப் பக்கமெல்லாம் சுத்திக்கிட்டு வராங்க. ஆனாலும் நடந்தது தெரியுமில்லே? எல்லாருக்கும் கண் அசத்துற வேளை! குபீல்னு நடுவாலே இருக்கிற குடிசை 'டாப்'பிலே பளிச்சுன்னு வெளிச்சம்! தேர்த் திருவிழாக் காலங்களிலே பெரிய சட்டி மத்தாப்பு கொளுத்துவாங்களே சாமி முன்னாலே! அது மாதிரி! அவ்வளவுதான்! குபீர்னு பத்திக்கிடுச்சு! நாங்க எவ்வளவோ முழிப்பா இருந்தும் நூறு குடிசை எரிஞ்சு போச்சு! நல்ல வேளை! காத்து பலமா இல்லே! இஞ்சின் வந்து சேர்ந்துடிச்சு. இல்லாத போனால் முந்நூறு குடிசைங்களும் போயிருக்கும்! பாவிப் பயல் அதைக் கணக்குப் பண்ணித்தான் நடுவாலே இருந்த குடிசையைக் குறி வைச்சிருக்கான்” என்றார் நாட்டார் தோட்டத்தைச் சேர்ந்த பாட்டனார் ஒருவர். அவர் குடிசையும் பலியான குடிசைகளில் ஒன்று.

“மெட்ராஸில் உள்ள அத்தனை குடிசைகளையும் தீர்த்துக் கட்டிடப் போறாங்களாம், சார்! ஸிட்டியை அழகாக மாற்ற இது ஒரு ஐடியான்னு சொல்றாங்க” என்று தம் சொந்த அபிப்பிராயத்தைப் பிறர் வாக்காக அளக்க ஆரம்பித்தார் இன்னொரு ரிட்டயர்ட் மிலிடரி கிழவனார்.

மந்தைவெளிப் பகுதியில் ஒரு வயதான மூதாட்டி. பல வீடுகளில் வேலை செய்து பிழைப்பு நடத்துபவள். இரண்டு நாட்களுக்கு முன்னால்தான் பல நாட்கள் சிரமப்பட்டு உழைத்துச் சேமித்துவைத்த பணத்தைக் கொண்டு ஒன்பது ரூபாய்க்கு ஒரு சேலை வாங்கினாள். திருவல்லிக்கேணியில் மலிவாகக் கிடைக்கிறது என்று யாரோ சொல்லக் கேட்டு, பஸ்ஸுக்குத் துட்டைச் செலவழிக்க முடியாத நிலையில் நடந்து போய் வாங்கி வந்திருக்கிறாள். அதை அடுத்த வாரம் உடுத்தலாம் என்று நிச்சயித்திருந்தாள். ஆனால் இன்று அந்தக் கறுப்புப் புடவை இருந்த இடமே கருகிச் சாம்பலாகிப் போய்விட்டிருக்கிறது. “இனிமேல் இந்த ஜென்மத்திலே எங்கே ஐயா புதுசா வாங்கிக் கட்டப் போறேன்” என்ற அந்த மூதாட்டியின் பிரலாபம் இன்னும் செவிகளில் ஒலிக்கிறது.

டிரான்ஸிஸ்டர் எரிந்து போயிற்றே என்று கவலைப்படுகிறவர்களைவிட, அடுத்த நாள் உடுத்த வேண்டிய துணிமணி உள்ள டிரங்குப் பெட்டி பொசுங்கிப் போயிற்றே என்று உருகுபவர்களிடம்தான் நம் அனுதாபம் பாய்கிறது. அப்படியே நெருப்புக்குத் தப்பி டிரங்குப் பெட்டி பிழைத்தாலும் பிறர் துன்பத்தைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்தும் கயவர்களிடமிருந்து அந்த மாதிரி டிரங்குப் பெட்டிகள் தப்புவதில்லை.

ஐந்தாறு பெண்மணிகள் தங்கள் உடைமைகளைக் காப்பாற்றிக் கொண்டு ஒரு பொது இடத்தில் உட்கார்ந்திருந்த போது, அவர்களுக்குப் பக்கத்தில் இலவசச் சாப்பாடு கிடைப்பதாக ஏமாற்றி அனுப்பி, அவர்கள் தலை மறைந்தவுடன் அவர்கள்







## எப்படி அர்த்தம் செய்து கொள்வது?

முன்னால் போய்க் கொண்டிருக்கும் பெண் காரோட்டி, இப்படியெல்லாம் கையைக் காட்டினால், பின்னால் காரில் வந்து கொண்டிருக்கும் ஆண் அவற்றை எப்படி அர்த்தம் செய்து கொள்வது?

கீழே பாருங்கள் :

சாமான்களை ஒரு வண்டியில் போட்டுக் கொண்டு கம்பி நீட்டி விட்டார்களாம்!

நெருப்புக்குத் தப்பியது, நீசர்கள் பார்வைக்குத் தப்பவில்லை.

கோடம்பாக்கம் நெடுஞ்சாலைப் பகுதியில் நெருப்புப் பரவிய தினம்! பக்கத்துப் பகுதியில் இருந்த பையன் வேடிக்கை பார்க்கும் கூட்டத்தில் இருந்தான். அவனுக்குக் கொஞ்சம் கிரிக்கெட் பைத்தியம். எப்போதும் கிரிக்கெட் பந்தை 'பௌல்' செய்வது போல் கையைத்தூக்கிச் சுழற்றிக்கொண்டே இருப்பானும்! வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பவன் கம்மா நின்று பார்க்கக் கூடாதோ? தன்னை மறந்து கையைச் சுழற்றியிருக்கிறான். அவன் தான் ஏதோ நெருப்பு வைக்கும் பாஸ்பரஸ் துண்டை எறிகிறான் என்று அவனைச் சூழ்ந்து கொண்டு சிலர் உதைக்க ஆரம்பித்து விட்டார்கள். அப்புறம் அந்தப் பையனின் தாயார் ஓடி வந்து அடையாளம் சொல்லி மகனை மீட்டிருக்கிறாள்.

விபத்துக்கள் எதிர்பாராமல் நடக்கலாம். ஆனால் இந்தத் தீ விஷமங்கள் சென்னையில் எதிர்பார்த்தபடியே நடக்கின்றன. நுங்கம்பாக்கம் பகுதியில் அன்று காலையிலே மாலைத் தீயைப் பற்றி வதந்தி பரவியிருக்கிறது. முன் யோசனையுள்ள ஒரு சிலர் தாங்கள் வேலை செய்யும் பங்களாக்களில் தங்களது முக்கியமான உடைமைகள் சிலவற்றைப் பத்திரப் படுத்திவிட்டு வந்திருக்கின்றனர். போலீஸார் குற்றவாளிகளைத் தீவிரமாகத் தேடிக் கொண்டிருக்கையில் தீ அணைப்புப் படையினரின் பாடுதான் ரொம்பக் கஷ்டமாகப் போயிற்று. ஒரு சேரியில் பிடித்துக் கொண்டதாக டெலிபோன் வரவே அங்கு போய்ப் பார்த்தால் எல்லாம் அமைதியாக இருக்கும். சரி, வீண் புரளி என்று திரும்பி வந்து சேர்ந்த மறுகணமே நிஜமாகவே அங்கு தீப்பிடித்துக் கொண்ட செய்தி கிட்டும்.

இத்தகைய கொடும் செயல்களில் யார், ஏன் ஈடுபட்டிருக்கிறார்கள்? ஏழை மக்களை நிராதரவாகத் தெருவில் நிறுத்துவதில் அவர்களுக்கு என்ன ஆனந்தம் என்பதெல்லாம் நாளடைவில் தெரியாமல் போகாது! அராஜகச் செயலில் ஈடுபடும் கயவர்கள், மனித தண்டனைக்குத் தப்பினாலும் ஆண்டவனுடைய தண்டனைக்குத் தப்பாமல் இருக்க மாட்டார்கள்!

ஆனாலும், இன்று மக்களுக்கு ஏற்பட்ட அல்லலும், பீதியும், அவர்கள் உள்ளங்களை வாட்டித்தானே எடுக்கின்றன?

தீ வைப்பின் காரணங்கள் என்னவாக இருந்தாலும் அந்தச் செயலில் ஈடுபட்டவர்கள் மனிதத் தன்மையை இழந்துவிட்ட அரக்கர்களாகி விட்டார்கள்! அவர்களை உடனடியாகக் கண்டுபிடித்து, மேலும் இந்த விஷமம் பரவாமல் தடுப்பது அரசாங்கத்தின் முக்கியமான கடமையாகிவிட்டது.

அத்துடன் உதவி நிதி திரட்டும் பணியில் தலைக்குத் தலை ஈடுபடுவதைத் தவிர்த்து இப்பணி சீரான முறையில் நடக்குமாறு பார்த்துக் கொள்வதும் அவசியமாகிறது.

முன்னை இட்ட தீ — முப்புரத்திலே!
பின்னை இட்ட தீ — தென் இலங்கையிலே!
அன்னை இட்ட தீ — அடிவயிற்றிலே
சென்னைபட்ட தீ அனைய அனையவே!

என்று பட்டினத்தார் பாடலின் கடைசி வரியை மாற்றிப் பாடலாமா என்றே தோன்றுகிறது!

நெருப்பு வைக்கத் துணிந்தவர்களிடம் நேர்மையை எதிர்பார்ப்பதும் தவறுதான்! ஆனால் எள்ளத்தனை மனிதாபிமானம்கூடவா இல்லாமல் போய்விடும்? ஆயிரக்கணக்கான தாய்மார்களை அகதிகளாக்கி நடுத் தெருவில் நிறுத்தத் துணிந்த அவர்களும் ஒரு தாய்க்குப் பிறந்தவர்கள்தானே!

---

அந்தச் சைகைகளுக்கெல்லாம்
அர்த்தம் ஏதோ என்னவோ, யாருக்குத்
தெரியும்? ஆனால் இந்தப் படத்தில்
ஆண் மகன் காட்டும் சைகைக்கு அர்த்தம்
தெளிவாகத் தெரிகிறதல்லவா?

— ராஜாமணி

விக்எண்ட்



# விஞ்ஞானமே வைபோகமே!

## கண்ணான கண்கள்

ஒரு காகிதத்தை ஓர் அங்குல விட்டத்துக்குச் சுற்றி எடுத்துக் கொள்ளவும். இடது கண்ணை மூடிக் கொள்ளவும். இடது கையால் குழாயை மூடிய கண்ணுக்கு நேராக வைத்துக்கொண்டு வலது கண்ணால் பார்க்கவும். இனி இடது கண்ணைத் திறக்கவும். கையில் உள்ள குழாய் வழியாக இரு கண்களாலும் பார்ப்பது போல் இருக்கும். இன்னொரு பரிசோதனை:

ஒரு கண்ணை மூடிக் கொண்டு அறையில் உள்ள சிறிய பொருளைப் பார்க்கவும். ஒரு விரலைக் கண்ணுக்கருகில் வைத்து அந்தப் பொருளைப் பார்வையிலிருந்து மறையும்படி செய்யவும். இனி மற்றக் கண்ணைத் திறக்கவும். இரண்டு கண்களாலும் பார்க்கும்போது விரல் பார்வையிலிருந்து மறைந்துவிடுகிறது.

இவ்விதம் சிறு சிறு பரிசோதனைகளின் மூலம் கண்களின் அமைப்பு அவை இயங்கும் விதம் ஆகியவற்றை விளக்குகிறது. ''நமது கண்கள்'' என்ற நூல்.

ஆசிரியர்: ஜான் பெர்ரி. தமிழாக்கம்: சண்முக சுந்தரம். தென்மொழிகள் புத்தக டிரஸ்ட், ரூ. 2-30.



## யானைகளின் வாழ்க்கை



□ காட்டு யானை மேலும் வெறி பிடித்து இளம் பிடி யானையை இறுகப் பற்றி அணைத்தது. மாறி மாறி முத்தமிட்டுக் கொண்டே இருந்தது. அப்பெண் யானை தவியாய்த் தவித்தது; தீனமாகக் கதறியது.

''பைத்தியம்! பைத்தியம் பிடித்து விட்டது!'' — சின்னக் கொம்பன் யானை உரக்க அறிவிப்பது கேட்டது. வெறி கொண்ட காட்டு யானை அந்த அறிவிப்பை இலட்சியம் செய்ய வில்லை. காதில் பட்டதாகக்கூடக் காட்டிக் கொள்ளவில்லை. யானைக் கூட்டம் அஞ்சி நின்றது.

எப்படியோ பெண் யானை வெறிப் பிடிப்பிலிருந்து விடுபட்டது. தப்பித்து ஓட்டம் பிடித்தது. விடுதலை வேட்கை புது சக்தியை வளர்த்தது......

இப்படிக் காட்டு யானைகளின் வாழ்க்கை முறைகளைக் கதை போல் சுவைபட எழுதியிருக்கிறார் மலையாளத்தில் வி. பாலகிருஷ்ணன். சௌரியின் தமிழ் மொழிபெயர்ப்பு நன்றாக இருக்கிறது. படங்களுடன் கூடிய பதிப்பு.

''காட்டு யானை'' தென்மொழிகள் புத்தக டிரஸ்ட்; சென்னை, விலை: ரூ. 1-35.

## மாமா கூறும் விஞ்ஞானக் கதைகள்

□ ''சோமு! நீ பள்ளிக்கூடத்துக்குப் போய்க்கொண்டிருக்கிறாய். உனக்கு முன்னால் உன் நண்பன் கோபி சென்று கொண்டிருக்கிறான். நீ அவனோடு போய்ச் சேர்ந்து கொள்ள வேண்டும். ஆகவே கூப்பிடுகிறாய். ஆனால் உன் குரல் அவனுக்குக் கேட்கவில்லை. அப்போது நீ என்ன செய்ய வேண்டும்? உனது இரண்டு கைகளையும் வாய் அருகே குழாய் போல் வைத்துக் .கொண்டு கூப்பிட்டால் அவனுக்குக் கேட்கும். மேற்கண்டபடி செய்வதால் உன் குரல் கோபிக்குக் கேட்கக் காரணம் என்ன? உன்னிடமிருந்து எழும் குரல் வாய் அருகே குழாய் போன்ற அமைப்பு வழியாக ஒரே திசையை நோக்கிப் பாய்வதால் அதிக தூரம் செல்ல முடிகிறது.''

இப்படி எளிய விஞ்ஞான உண்மைகளை இலகு தமிழில் குழந்தைகளுக்காகத் தருகிறது, ''விஞ்ஞான உலகம்'' என்ற நூல். வேலாக வெங்கடசுப்பையா எழுதிய தெலுங்கு நூலின் தமிழாக்கம். தென்மொழிகள் புத்தக டிரஸ்ட், சென்னை; விலை: ரூ. 1-35.



## கிணறு வெட்ட...



□ மருத்துவம், மருந்துகள் பற்றி அரைகுறையாகத் தெரிந்து வைத்துக் கொள்வதில் ஆபத்துக்கள் உண்டு. ஜுரம் தலைவலி என்று ஏதேனும் வரும் போது நாலு சல்பா மாத்திரைகளை விழுங்கி வைத்தால் சரியாகப் போய்விடும் என்று எண்ணிச் சுயமாக வைத்தியம் செய்து கொள்வோர் பலர்.

ஆனால் சல்பா மருந்துகளால் நன்மையுடன் தீமைகளும் ஏற்படுவதுண்டு:

"சிறு நீரகங்கள் மூலம் மருந்து வெளியேற்றப்படும் முறையில் சல்பா கலவை மருந்து சிறுநீர்க் குழாய்களை அடைத்துக் கொள்ளும். அதன் காரணமாக ஏற்படும் சிறுநீர்த் தடை என்ற நோய், எந்த நோயைக் கருதி சல்பா மருந்து உட்கொள்ளப்பட்டதோ அந்த நோயை விடக் கொடியது. இதைத் தவிர்ப்பதற்கு அதிக அளவில் திரவப் பொருட்களைக் கொடுத்துச் சிறுநீரைக் காரத் தன்மை கொண்டதாக வைத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் சிறுநீரில் ரத்தம் கலந்து வரலாம். அது சிறுநீரகங்களில் சல்பா காம்பவுண்டுகளால் ஏற்படும் அடைப்பினால் உண்டாவதாகும். தடைகள் ஏற்பட்டால் சிறுநீரே வெளி வராது. இந்தக் குழப்பங்களைத் தவிர்க்கப் போதுமான வரை குடிப்பதற்குத் திரவப் பொருள்களாகத் தருவது அவசியம்."

மருந்துகள் அவை இயங்கும் விதம் குறித்து அரைகுறையாகத் ,.. தெரிந்து வைத்துக் கொள்வதைவிட முழுமையாகப் புரிந்து கொள்வது நலம். அதற்கு டாக்டர் ரத்தினவேலு சுப்பிரமணியத்தின் இந்த நூல் பயன்படும்.

அற்புத மருந்துகள்: தென்மொழிகள் புத்தக டிரஸ்ட், சென்னை; விலை: ரூ. 1-20.

## விற்பனைக் கலைஞரின் மறைவு



'சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்' என்ற பாரதியின் வாக்கை நன்கு நிறைவேற்றி வைக்க மற்ற எல்லாரையும் விடத் தகுதியும் வாய்ப்பும் வசதியும் பெற்றவர்கள் புத்தகக் கடைக்காரர்கள். இந்த வாய்ப்பும் வசதியும் மட்டும் இருந்தால் போதுமா? அதனை நன்கு பயன்படுத்திக் கொள்பவர்கள் சிலரே. எல்லாப் புத்தகக் கடைகளும் மக்களுக்குப் பயனுள்ள தொண்டாற்றிப் பெருமை பெற்று விடுவதில்லை. உண்மையான அறிஞர்கள் எதையும் சுலபத்தில் பாராட்டிவிட மாட்டார்கள். ஆனால் புத்தகக் கடைகளோ அறிஞர்கள் பாராட்டினாலன்றி உண்மையில் புகழ் பெற்றவையாகா. அவ்விதமிருக்க . யாழ்ப்பாணத்துப் புத்தகக் கடை ஒன்று பலப் பல அறிஞர்களின் பாராட்டுதலைப் பெற்றிருக்கிறதென்றால், உரிமையாளர் திரு தம்பித்துரையை அல்லவோ அப்பெருமையெல்லாம் சாரும்? அமரர் கல்கி அவர்கள், "அன்பர் தம்பித்துரை புத்தகம் — பத்திரிகை விற்பனையை ஓர் அருங்கலையாக்கியிருக்கிறார். தமிழ்த் தாய்க்கு மிகச் சிறந்த பணி ஆற்றி வருகிறார். அவர் அடையும் வெற்றி தமிழின் வெற்றியாகும். ஈழநாட்டுப் பெருமக்கள் திரு தம்பித்துரைக்கு அளித்து வரும் ஆதரவைக் கண்டு மகிழ்கிறேன்" என்று பாராட்டியிருக்கிறார்.

யாழ்ப்பாணம் கல்கி ஏஜண்டாகவும் பணியாற்றி வந்த திரு தம்பித்துரை சென்ற ஜூன் 18ந் தேதி இவ்வுலகை விட்டு மறைந்தார். தமிழ்ப் பற்றும் இனிமையான குணமும் பெற்ற திரு தம்பித்துரையின் மறைவினால் துயரத்தில் ஆழ்ந்துள்ள அவரது குடும்பத்தினருக்கு நம் ஆழ்ந்த அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.





# முதல் டெஸ்ட் காட்சிகள்



லீட்ஸில் நடைபெற்ற முதல் டெஸ்ட் பாரத கிரிக்கெட் வீரர்களுக்குப் பெரும் புகழை ஈட்டித் தந்திருக்கிறது.

1. இந்திய ஆட்டக்காரர் இஞ்ஜினியர் இரண்டாம் இன்னிங்க்ஸில் பதினைன்கு பவுண்டரிகளை அடித்து இந்திய எண்ணிக்கையை உயர்த்தினர்.

2. காப்டன் பட்டோடியின் அற்புதமான 148 ரன்களுக்குப் பிறகு அவரது ஆட்டத்துக்கு முடிவு தேடிவிட்டார் இங்கிலாந்து பந்து வீச்சு நிபுணர் இலிங்வொர்த்.

3. இங்கிலாந்து தோஷ்டி விக்கெட் கீப்பர் முர்ரே காப்டன் பட்டோடி கொடுத்த ஒரு 'காட்'சைப் பிடிக்கத் தவறினர்: அதனல் இந்தியாவுக்குக் கிடைக்கவிருந்த மாபெரும் இன்னிங்ஸ் தோல்வி மாறியது. இந்திய ஆட்டக்காரர்களின் கௌரவம் பிழைத்ததுடன் அவர்களின் ஆட்டமும் மிளிர்ந்தது.






ராஜ நீதிகளைத் தெளிவாக விளக்கிக் கூறும் கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்திலிருந்து தொடங்கி, தூதர்களை மரியாதையுடன் நடத்த வேண்டியதன் அவசியத்தை நமக்கு நன்கு உணர்த்தியிருக்கிறார்கள் பெரியோர்கள் பலர். ஏன் மகாபாரதம்கூட எதிரியின் தூதனை எந்த ஓர் அரசன் கொல்லுகிறானோ அவனும் அவனுடைய மந்திரிமார்களும் கொடிய நரகத்தை அனுபவிப்பார்கள் என்கிறது.

ஐரோப்பாவில் பதினாறாம் நூற்றாண்டில் தூதர்கள் அரசனுடைய பிரதிநிதியாகக் கருதப்பட்டார்கள்—நாட்டுப் பிரதிநிதிகளாக அல்ல. இதனால் இவர்களுக்குள் மரியாதை ஸ்தானங்களைப் பொறுத்தவரை அடிக்கடி சண்டை மூண்டுவிடும்! 1504ல் போப் பாண்டவர் இரண்டாம் ஜூலியஸ் அரசப் பிரதிநிதிகளின் ஸ்தானங்களை வரிசைக்கிரமமாக நிர்ணயித்தார். இதன்படி போப் பாண்டவரும் அதை அடுத்து முறையே ஃபிரெஞ்சு, ஸ்பானிஷ் மன்னர்களும் முதல் மூன்று ஸ்தானங்களைப் பெற்றனர். பிரிட்டிஷ் அரசர் ஏழாவது இடத்தைத்தான் பெற்றார். இந்தத் தகராறுகளின் விளைவாக ஒரு முறை ஃபிரான்ஸும் ஸ்பெயினும் ஒன்றன் மீது ஒன்று போர் தொடுக்கும் அளவுக்குச் சென்று விட்டன — தங்கள் தங்கள் தூதர்கள் அவமதிக்கப்பட்டதாகக் கூறிக் கொண்டு!



1706ஆம் ஆண்டில் அரசி ஆன் பிரிட்டனை ஆண்டு வந்தபோது அங்கிருந்த ருஷ்யத் தூதர் சிறையில் அடைக்கப்பட்டார். இவர் ஏராளமாகக் கடன் வாங்கி விட்டுக் கடன்காரர்களுக்குக் கையை விரித்ததுதான் காரணம்! அப்போது ருஷ்ய மன்னர் பீட்டர் தி கிரேட் தமது தூதர் சிறையிலடைக்கப்பட்டதால் கோபம் கொண்டு பிரிட்டன் மீது படையெடுப்பதாகப் பயமுறுத்தினார். பிரிட்டன் யுத்தத்துக்குத் தயாராக இல்லை. ஆகவே பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அவசரம் அவசரமாக ஒரு சட்டம் இயற்றப்பட்டது. இதன்படி அயல்நாட்டுத் தூதர்களின் விசேஷ உரிமைகள் நிர்ணயிக்கப்பட்டன. அயல்நாட்டுத் தூதர்கள் புனிதமானவர்கள். அதிகாரபூர்வமாக அவர்கள் செயல்படும் வரையில் அவர்களை எந்தக் குற்றச்சாட்டுக்கும் உள்ளாக்கித் தண்டிக்க முடியாது. எந்த நீதிமன்றத்திலும் அவர்களை நிறுத்தி விசாரணை நடத்த முடியாது. உள்நாட்டு வரிகள் எதையும் அவரிடமிருந்து வசூலிக்கக் கூடாது என்றெல்லாம் இச்சட்டம் கூறியது. பிரிட்டனில் உருவான இந்தப் பழமையான சட்டம் தான் இன்றைக்கும் இவ்விஷயத்தில் எல்லா நாடுகளுக்கும் அடிப்படையாகவும் வழிகாட்டியாகவும் விளங்குகிறது.

எனினும், இந்தச் சட்டம் மீறப்பட்ட தருணங்களும் பல உண்டு. 1717ஆம் ஆண்டில் ஸ்வீடிஷ் பிரதிநிதி ஒற்றர் வேலை புரிந்ததாகக் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார், பிரிட்டனில்!— 1718ல் பிரான்ஸ், ஸ்பானிஷ் பிரதிநிதியைப் பாதுகாவலில் வைத்திருந்தது. தனது பிரதி



பிரிட்டனிலிருந்து வந்த இரண்டாவது காரியதரிசி திரு கே. ரகுநாத் இந்தியப் பிரதமருடன்.

நிதி அந்நாட்டிலிருந்து பத்திரமாகத் திரும்பி வரும் வரையில்!

நூற்று எட்டு ஆண்டுகளுக்கு முன்னால் வல்லரசுகள் ஒன்றுகூடித் தூதர்கள், தூதரகங்கள் ஆகியவற்றின் உரிமைகளைச் சர்வதேச நோக்கில் சீர்ப்படுத்த முனைந்தன. தூதர்கள் தகுதிக்கேற்ப நான்கு தரப்பினராகப் பிரிக்கப்பட்டனர். இந்நால்வகையினரிலும் ''அம்பாஸிடர்'' என்போரே முதல்தரமானவர்கள். சர்வதேச மாநாடுகள், ஒப்பந்தங்கள் ஆகியவற்றில் அம்பாஸிடர்கள் கையெழுத்திடும்போது அவர்களின் பெயர்கள் அகர வரிசைப்படுத்தப்பட்டு அதன்படி வரிசைக்கிரமமாகக் கையெழுத்துப் போடலாம் என்று முடிவாயிற்று. இதனால் ஏற்றத்தாழ்வு உணர்ச்சிக்கு இடமில்லாது போகும் அல்லவா?

இப்போது அகில உலகிலும் அமுலில் உள்ள வழக்கப்படி தூதர் வாழும் இல்லம் அவரது நாட்டைச் சேர்ந்த பகுதியாகக் 'கருதப்படும். ஆகவே, அதனுள் போலீஸார் நுழைந்தால் அது அந்நாட்டின் மீது படையெடுப்பதற்கு ஒப்பாகும். தூதர் தமது அலுவலகத்திலிருந்து கடிதங்களைத் தூதருக்குரிய பிரத்தியேகப் பையில் போட்டு அனுப்பலாம். அந்தக் கடிதங்களை 'ஸென்ஸார்' செய்யும் வகையில் இடையில் உடைத்துப் பார்க்கும் உரிமை எந்த அதிகாரிக்கும் கிடையாது.

நாளடைவில் தூதருக்குரிய இந்தச் சலுகைகளில் பல அவரது குடும்பத்தினருக்கும், அவரது வேலைக்காரர்களுக்கும்கூட விஸ்தரிக்கப்பட்டது. அதனால் பல சிரமங்கள் ஏற்பட்டன.

உதாரணமாக பிரிட்டனில் இப்போது சட்டத்தினால் சற்றேனும் பாதிக்கப்படாதவர்களாக மொத்தம் ஏழாயிரத்து ஐந்நூறு பேர்கள் உள்ளனர். ஒரு சமயம் 'முன்னேறி வரும் நாடு' ஒன்றின் விசேஷப் பிரதிநிதி தமது பியானோவைத் தமது வீட்டு ஜன்னல் வழியே கோபத்தில் எறிந்து விட்டார். அது சாலையில் இருந்த மோட்டார்கார்மீது விழுந்து கார் சப்பையாகி விட்டது.



☐ அயல் நாட்டுத்
☐ தூதர்களுக்கும்,
☐ தூதரகங்களுக்கும்
☐ பிரத்தியேக உரிமை
☐ களும் சலுகைகளும்
☐ உண்டு என்பதை
☐ உலக நாடுகள்
☐ அனைத்தும் ஒப்புக்
☐ கொண்டிருக்கின்றன.
☐ இந்தக் கோட்பாடு
☐ களைக் காற்றிலே
☐ பறக்கவிட்ட
☐ செஞ்சீனா நமது
☐ தூதரகத்தைச்
☐ சேர்ந்தவர்களுக்குக்
☐ கொடுமைகள்
☐ பல இழைத்துள்ளது!

காரின் சொந்தக்காரருக்கு நஷ்டஈடு கிடைக்கவில்லை. காரணம் அத் தூதர் மீது சட்ட நடவடிக்கை எடுக்க முடியாததுதான். சாலைகளில் தாறுமாறாகக் கார் ஓட்டும் பலர் தாங்கள் தூதரகங்களைச் சேர்ந்தவர்கள் என்று கூறி விசேஷச் சலுகை வேண்டினார்கள். 'ஸம்மன்ஸ்' அனுப்பினாலும் நீதி மன்றத்துக்கு வர மறுத்தார்கள்.

1963ஆம் ஆண்டு வாஷிங்டனில் மட்டும் பல்வேறு தூதரகங்களைச் சேர்ந்தவர்களால் பதினோராயிரம் குற்றங்கள் சாலைகளில் போக்குவரத்து விதிகளை மீறி இழைக்கப் பட்டன. நிலைமை இப்படிக் கட்டு மீறவே இருநூறு பேர்களுக்கு விசாரணைக்கு வருமாறு 'ஸம்மன்ஸ்' அனுப்பி வைத்தார்கள். உடனே பல தூதரகங்களைச் சேர்ந்தவர்கள் பெரும் ஆர்ப்பாட்டம் செய்தனர். எல்லா 'சம்மன்ஸு'களும் வாபஸ் பெறப்பட்டன!

ஆப்பிரிக்கத் தேசமொன்றின் பிரதிநிதியின் மனைவி தான் தங்கியிருந்த வீட்டில் தெரியாத்தனமாக நெருப்புப் பிடிக்க வைத்து விட்டாள். புதிதாக வாங்கிய 'ஸ்டவ்' அடுப்பை உபயோகிக்க அவளுக்குத் தெரியாததால் வந்த வினை! வீட்டின் சொந்தக்காரருக்கு நஷ்டஈடாகப் பைசாகூடக் கிடைக்கவில்லை, பாவம்!

ஒரு தூதரின் கார் பாதசாரி ஒருவர்மீது மோதிக் காயப்படுத்தி விட்டது. அந்தப் பாதசாரிக்கு அடிபட்ட வேதனையுடன் நஷ்டஈட்டுத் தொகை ஏதும் கிடைக்காத வேதனையும் சேர்ந்து கொண்டது!

அயர்லாந்து தேசத்துப் பிரதிநிதியின் மகன் இதற்கெல்லாம் ஒரு படி மேலேயே போய் விட்டார். நன்கு குடித்து விட்டு ஆர்ப்பாட்டம் செய்த போது இவரை அடக்க முயன்ற ஒரு போலீஸ்காரரை இவர் அடித்து நொறுக்கி விட்டார்! இவரை ஒன்றும் செய்ய முடியவில்லை; ஏனெனில், இவர் ஒரு தூதரின் மகனாயிற்றே! அயல் நாடுகளில் உள்ள அமெரிக்கத் தூதரகங்கள் பலவற்றைச் சேர்ந்தவர்கள் மீது ஒரு பெரிய குற்றச்சாட்டு

இருந்து வந்தது. இவர்கள் தங்கள் நாட்டிலிருந்து புத்தம் புதிய மோட்டார் கார்களைத் தங்கள் உபயோகத்துக்காகத் தருவித்துக் கொள்கின்றனர்; சில மாதங்களுக்குப் பிறகு மூன்று மடங்கு அல்லது நான்கு மடங்கு விலைக்கு அவற்றை விற்று விடுகின்றனர்; ஏராளமான லாபத்துடன் தாய்நாடு திரும்புகின்றனர் என்பது தான் அந்தக் குற்றச்சாட்டு. 1965ஆம் ஆண்டு அமெரிக்க சர்க்கார் ஒரு சட்டம் இயற்றியது. அதன்படி இந்த விலை வித்தியாசத்தை அமெரிக்கத் தூதரகங்களைச் சேர்ந்தவர்கள் ஒரு தர்ம ஸ்தாபனத்துக்குத் தந்துவிட வேண்டும். அல்லது அமெரிக்க உதவியுடன் அந்நாட்டில் நடைபெறும் ஓர் ஆக்கப் பணிக்கு உதவக் கொடுத்துவிட வேண்டும்! இதனால் சட்டம் அமுலுக்கு வந்த ஆண்டான 1965ல் மட்டும் இருபது லட்ச ரூபாய் பல்வேறு காரியங்களுக்கு நன்கொடையாகத் தரப்பட்டது!

இந்தியாவில், தென் அமெரிக்கத் தூதரகம் ஒன்றில் பணியாற்றிய ஓர் உயர் உத்தியோகஸ்தர், பொருள்களைக் கள்ளத்தனமாகக் கடத்தி வரும் கும்பலைச் சேர்ந்தவர் என்பதைச் சில ஆண்டுகளுக்குமுன் கண்டுபிடித்தார்கள்.

இவர் கள்ளத்தனமாக இந்தியாவுக்குள் உயர்ரகக் கைக்கடிகாரங்களைக் கொண்டு வரத் தூதரகத் தபால் பைகளைப் பயன்படுத்தினார். இந்தப் பைகளின் 'ஸீல்'களை உடைக்கும் அதிகாரம் பாரதப் போலீசுக்குக் கிடையாதல்லவா? இது அவருக்கு மிகவும் உதவியாக இருந்தது!

இம்மாதிரி சமயங்களில் நாம் செய்யக் கூடியது ஒன்றே ஒன்றுதான். அது இந்த உத்தியோகஸ்தரின் ஸ்தானிகராலய உரிமைகளை நாம் ஏற்கவில்லை என்றும் அவரை அந்த நாட்டிலிருந்து வந்த ஒரு சாதாரணப் பிரஜையாகவே கருதுகிறோம் என்றும் தெரிவிப்பதும் குறிப்பிட்ட கால அளவுக்குள் அவர் தாய்நாடு திரும்பிவிட வேண்டும் என்று எச்சரிக்கை விடுப்பதும்தான்.

1961 முதல் 1963 வரை இரண்டு ஆண்டுகளுக்கு ஐ. நா. சபையின் ஆதரவுடன் வியன்னாவில் ஒரு மகாநாடு நடந்தது. இரு ஆண்டுகள் விவாதித்து மொத்தம் நானூற்று இருபத்தியெட்டு திருத்த மசோதாக்களும் கொண்டு வந்தபின் தூதரக உறவுகள் பற்றி எழுபத்தோர் அம்சங்கள் கொண்ட ஒரு சாஸனம் உருவாயிற்று. இதில் ஸ்தானிகர்களுக்கும் ஸ்தானிகராலயங்களைச் சேர்ந்தோருக்கும் உள்ள தனி உரிமைகள், சலுகைகள் பற்றிப் பன்னிரண்டு கொள்கைகள் வகுக்கப்பட்டுள்ளன. இந்த உரிமைகளையும் சலுகைகளையும் அவர்கள் தங்களது உத்தியோகபூர்வமான அலுவல்களில் ஈடுபட்டிருக்கும் போதுதான் பிரயோகிக்க முடியும் என்று தீர்மானமாகிறது. சொந்த லாபத்துக்கோ, அல்லது சொந்த முறையிலோ அவர்கள் எந்த அலுவலிலும் ஈடுபடலாகாது என்றும் சாஸனம் கூறுகிறது.

இருப்பினும் என்ன; சமீப காலச் சரித்திரத்தில் ராஜரீக உறவுகள் பற்றி எவ்வளவு ஆராய்ச்சி நடத்தித் தேடினாலும் சீனர்கள் நம் பிரதிநிதிகளிடம் நடந்து கொண்ட மிருகத்தனமான போக்குடன் ஒப்பிடக்கூடிய வேறு ஒரு சம்பவத்தைக் கண்டுபிடிப்பது கடினம்.

— சரித்திர மாணவன்

---

# நடிக்கத் தெரியுமா?



நடிப்புக் கலையைப் பற்றி நாலைந்து பேர்கள் சூடான விவாதத்தில் ஈடுபட்டிருந்தனர். சட்டென்று அவர் துள்ளி எழுந்தார். "உண்மையான நடிப்பு என்ன என்பதை நான் காண்பிக்கட்டுமா?" என்று கேட்டார். அவரை எல்லோரும் ஆவலுடன் பார்த்தார்கள். ஆனால் அவர் ஏதும் பேசவில்லை. மௌனமாக வெளியேறினார். அவர் திரும்பி வராததைக் கண்ட அவர்கள் அவரைப் பித்தன் என்று நினைத்துத் தங்கள் எண்ணத்திலிருந்து ஒதுக்கி மறுபடியும் பேசலானார்கள்.

திடீரென்று கதவு திறந்தது. வாசற்படியில் அவர் - அந்த மனிதர் - நின்றுகொண்டிருந்தார். சாவின் பிடியில் சிக்கியவனைப் போன்ற வெளுத்த முகம். தலைமயிரோ அலங்கோலம். முகத்திலே பீதி. தாறுமாறாக அணியப்பட்ட உடை. தள்ளாடித் தடுமாறி நின்ற அவர் வாய் ஒரே ஒரு வார்த்தையைத்தான் கூறியது. அதுவும் திக்கித் திணறி: "நெருப்பு!"

அவ்வளவுதான்; அங்கிருந்தவர்கள் அலறிப் புடைத்துக் கொண்டு மூலைக்கொருவராக ஓடத் தொடங்கினர். ஒரே குழப்பம்.

அப்போது வாசற்படியில் நின்றவர் கடகடவென்று சிரித்தபடியே கூறினார்:

"இதுதானய்யா நடிப்பு!"

ஆதாரம்: ஸ்புட்னிக்
தகவல்: கௌசிக்

## சாட்சி தரும் காட்சி **********

குறுக்கு விசாரணை செய்யும் வழக்கறிஞர் சாட்சியை நோக்கி, "இதோ பார், நான் இப்போது மிக முக்கியமான கேள்விகள் கேட்கப் போகிறேன். நீ ஒழுங்காகப் பதில் சொல்ல வேண்டும்" என்று எச்சரித்தார்.

"சரி" என்று தலையசைத்தான் அந்தச் சாட்சி.

வழக்கறிஞர்: நீ எங்கே வசிக்கிறாய்?
சாட்சி: ராமனுடன் வசிக்கிறேன்.
வ: ராமன் எங்கே வசிக்கிறான்?
சாட்சி: என்னுடன்.
வ.: நீங்கள் எங்கே வசிக்கிறீர்கள்?
சா.: இருவரும் ஒன்றாக வசிக்கிறோம்.
வ.: இருவரும் ஒன்றாக எங்கே வசிக்கிறீர்கள்?
சா.: ஓர் அறையில்.
வ.: அந்த அறை எங்கே உள்ளது?
சா.: மாதா கோவிலுக்கு முன்னால்.
வ.: அந்த மாதா கோயில் எங்கே உள்ளது?
சா.: எங்கள் அறைக்கு முன்னால்.

அவ்வளவுதான் வழக்கறிஞருக்குத் தலை சுற்றியது.

- குற்றாலம் வி. சம்பந்தம்




சமையல் அறையிலே கால்காஸ் நிறுவினால், சமையல் செய்வதிலே உள்ள ஆனந்தம் உங்களுக்குப்புரியும். கால்காஸ் உபயோகிக்க எளிதானது...நொடியில் பற்றிக் கொள்கிறது ...உடனடியாக சூடு கொடுத்து, சமையல் நேரத்தை மணிக் கணக்கில் குறைக்கிறது...சிக்கனமானதும் கூட. கால்காஸ் சுத்தமானது...கரியில்லை புகையில்லை..தேய்த்துக்கழுவும் தொல்லையுமில்லை.

## கால்காஸ் அபாயமற்றது...

விசேஷமான மூடியைக் கொண்ட அபாயமற்ற இரும்பு ஸிலிண்டர்களில் கால்காஸ் வருவதால், ஒழுக்கோ, கையாளுவதில் தவறுதலோ எதுவும் நேராது.

## வீட்டிலே டெலிவரி கொடுக்கப் படுகிறது

ஏக போக விநியோகஸ்தர்கள் :

**ஈஸ்ட் கோஸ்ட் காஸ் கம்பெனி,**

48-9-5 கோவாபரேடிவ் காலனி, துவாரகாநகர், விசாகப் பட்டினம் 4, போன் : 3516

கன்னிமாரா அனெக்ஸ், மவுண்ட் ரோடு, மதராஸ் 2., போன் : 83428

ஏஜெண்ட்ஸ்: மதராஸ், காக்கிநாடா, விசாகப்பட்டினம், விஜயவாடா, ஏலூரு, குண்டூர், பலகோல், ராஜமுந்திரி, நெல்லூர், விஜயநகரம், மசூலிப்பட்டினம், சேலம், காட்பாடி, ஓங்கோல், வாரங்கல், பாண்டிச்சேரி, காஞ்சிபுரம், கர்நூல், சித்தூர், திருப்பதி, பொப்பிலி, பார்வதிபுரம், ராமச்சந்திர புரம், சோமபேடா, நரசராவபேட்டை.

காஸ்டெக்ஸ் தயாரிப்பு

**இந்தப் பாங்கியிலே ஒரு விசேஷம்... இதில் வேலை செய்பவர்கள் அனைவரும் பெண்கள் !**




'கஸ்டமர்'களின் சந்தேகங்கள் தீர்த்து வைக்கப்படுகின்றன.

**வி**டுவிடுவென்று உள்ளே நுழைந்த அந்தப் பையன் வெகு சூடிகையான பையன். வைத்த இடம் தெரிந்தவன் போல் ஓர் இடத்துக்குச் சென்றான். 'சலான்' பாரத்தை எடுத்தான். 'பற பற' வென்று ஏதோ எழுதினான். காஷ் கவுண்டருக்கு அருகில் சென்றதும் அரை டிராயர் பையில் கையை விட்டான். பாஸ் புத்தகத்தையும் பத்து ரூபாய்ப் பணத்தையும் சலான் பாரத்தோடு நீட்டினான். உள்ளிருந்த மென்கரம் வாங்கிக் கொண்டதும் துறுதுறுவென்று இங்கும் அங்கும் நடை போட்டான்.

ஒரு கிழவி வந்தாள்.

''சாமி, நான் தண்டையார்ப்பேட்டையிலிருந்து வருகிறேன். இந்தக் கணக்கில் அஞ்சு ரூபாய் கட்டணும். அந்தக் கணக்கில் எட்டு ரூபாய் எடுக்கணும், எழுதிக் கொடுங்க!'' என்றாள்.

நான் தயங்கினேன். அதைப் பார்த்த அந்தப் பையன், ''இங்கே கொண்டு வா, பாட்டி ! நான் எழுதித் தருகிறேன்!'' என்றான். அவளிடத்தில் விவரம் கேட்டுக் கொண்டு 'சடபட' வென்று எழுதியும் கொடுத்தான்.

''சாமி, குளந்தைப் புள்ளே எழுதினது. இதிலே தப்புகிப்பு ஏதும் இல்லீங்களே, பார்த்துச் சொல்லுங்க!'' என்றாள் கிழவி என்னிடம் காகிதங்களை நீட்டி.

மணிமணியான எழுத்தில் அடித்தல் திருத்தல் எதற்கும் இடம் வைக்காமல் கனகச்சிதமாக எழுதியிருந்தான் மணிப் பயல். நான் வியந்து நின்றேன்.

''அப்பவே பிடிச்சு நானும் பார்க்கிறேன். ஒன்றும் புரியாதவர் போல் நிற்கிறீர்களே, உங்களுக்கு என்ன வேணும்?'' என்று கேட்டான் சிறுவன்.

''பாங்கி மானேஜரைப் பார்க்கணும் !'' என்றேன் அப்பொழுதுதான் வாய் திறந்து.

''வாருங்கள், என்னோடு !'' என்றவன் ஓர் அறை வாசலை அடைந்து தன்னு கதவைத் திறந்து. ''குட்மார்னிங், மேடம்! உங்களைப் பார்க்க யாரோ வந்திருக்கிறாங்க!'' என்று கூறி என்னை உள்ளே அனுப்பி வைத்தான்.

''வாங்க, உட்காருங்க! உங்களுக்கு....''

உட்காராமலே நான் கேட்டேன். ''இந்தப் பையன் யாரு ?''

''எங்கள் பாங்கிக் 'கஸ்டமர்'. இங்கே இவனுக்கு ஒரு சேமிப்புக் கணக்கு உண்டு.''

''என்ன?''

''வியப்பாயிருக்கிறதா ? எங்கள் பாங்கியிலே சிறுவர்களும் பணம் போடலாம், வாங்கலாம். கணக்கு ஆரம்பிக்கிற பொழுது குறைந்தபட்சம் ஒரு ரூபாயாவது கட்டித்தான் ஆரம்பிக்க வேண்டும். அப்புறம் கால் ரூபாய்கூடக் கட்டலாம். ஆனால் எடுக்கிறது ஒரு ரூபாய்க்குக் குறையக் கூடாது.''

''மைனர் பையன்களே போட்டு எடுக்கலாமா ?''

''பேஷா ! பன்னிரண்டு வயதாவது இருக்கணும். இந்த வயசிலேயே சேமிப்புப் பழக்கத்தை உண்டு பண்ணுகிறோம். காசு கொடுத்தால்தான் பள்ளிக்கூடத்துக்குப் போவேன் என்று முரண்டு பிடிக்கிற குழந்தைகள் கண்டதை — கேட்டதை வாங்கித் தின்னாமல் இருக்கவும் இது பயன்படுகிறது. அதோடு பணம் போட்டு எடுக்கத் தெரியாதவர்களுக்கு இந்தக் குழந்தைகள் உதவுகிறாற்போலப் பெரியவர்களாலும் உதவ முடிவதில்லை. இவர்களால் எங்கள் பாங்கிக்கு இன்னொரு பெரிய லாபம் என்ன, தெரியுமோ? பெற்றோர்கள், உபாத்தியாயர்கள், சக மாணவர்கள் ஆகியவர்களையும் எங்கள் பாங்கியில் கணக்கு வைத்துக் கொள்ளத் தூண்டி விடுகிறார்கள். எங்கள் தொழில் வளர்ச்சியில் இவனைப் போன்ற சிறுவர்களுக்கும் இடம் உண்டு.''

''பேஷ் ! இப்படி ஒரு யோசனை தோன்றியதே பிரமாதம்தான்! இந்தப் பாங்கித் தொழில் பற்றித்....''

''....தெரியாததை நான் என்ன சொல்லி விடப் போகிறேன். எல்லாப் பாங்கிகளைப் போலத்தான் எங்கள் பாங்கியும் செயலாற்றுகிறது. ஒரே ஒரு விசேஷம் இதிலே நீங்கள்

பார்த்திருப்பீர்கள். இங்கே வேலை செய்கிறவர்கள் அனைவரும் பெண்கள்.''

''ஆண்களுக்குப் பெண்கள் சளைவில்லை என்பதை ரூபாய் நோட்டு எண்ணுகிற சுறுக்கில் கூடக் கண்டு கொண்டேன்.''

''கணக்கு — வழக்கு வைத்துக் கொள்வதிலும் ஒன்றும் சாமர்த்தியக் குறைவானவர்கள் இல்லை.''

''அதில் அதிசயமில்லை; இன்றைக்கும் எத்தனையோ பேர் சம்பளம் வாங்கினதும் விள்ளாமல் விரியாமல் வீட்டில் மனைவியிடம்தானே கொண்டு வந்து கொடுக்கிறார்கள்!—அது சரி, கிடைக்கும் பணத்தை நீங்கள் என்ன செய்கிறீர்கள் ?''

''நம்பகமான தொழில்களில் முதலீடு செய்வோம். அரசாங்கத்தின் ஆக்கப் பணிகளுக்குக் கடனுதவி புரிவோம். தனி

● கவுண்டரில் மும்முரமாக வேலை நடக்கிறது.



யார்த் துறையில் லாபகரமான முறையில் தொழில் நடத்துகிறவர்களுக்கும் கடன் கொடுத்து ஊக்குவோம்!''

''பணத்தைத் தவிர வேறு விலை உயர்ந்த பொருள்களையும் பாங்கியில் கொண்டுவந்து வைத்துப் பத்திரப்படுத்தலாம் அல்லவா?''

''ஓ! பாங்கிகளில் 'ஸேப்டி டிபாஸிட்' என்று ஒரு முறை இருக்கிறது. உங்கள் பொருளை அங்கு கொண்டு வந்து வைக்கலாம். உங்களிடம் ஒரு சாவி, பாங்கியிடம் ஒரு சாவி இருக்கும். இருவரும் சேர்ந்துதான் திறக்க முடியும். உங்களுக்குத் தேவையானபோது எடுத்துக் கொள்ளவோ, திரும்ப வைக்கவோ பாங்கிகள் உதவுகின்றன. இதற்காக அதிகமாக 'சார்ஜ்' செய்வதில்லை. அப்புறம் உயில்கள், டிரஸ்டிஷிப் முதலியவற்றைப் பங்கீடு செய்யும் பொறுப்பையும் ஏற்கிறோம். அந்நியச் செலாவணி பற்றிய அலுவல்களையும் கவனிக்கிறோம். வருமான வரி பற்றியபொறுப்பையும்கூடப் பாங்கிகளிடம் விட்டு விடலாம்.''

''நாங்கள் விடுவானேன்? அரசாங்கமேதான் 'சம்பாதிக்கும்பொழுதே வரி' என்று விதி ஒன்று கொண்டு வந்து பாங்கிகளையே வரித் தொகையை வசூலிக்கச் சொல்லப் போகிறதே! நீங்கள் அதன் சொல்லுக்கு ஆடித்தானே ஆகவேண்டும்?''

● சிண்டிகேட் பாங்கின் மானேஜர் குமாரி பிரேமாராவ்.



''இப்படி ஒரு விதி கொண்டு வருவது தவறான காரியம். தடுத்துச் சொல்ல ஆளில்லை. இருந்தாலும் அது கேட்கத் தயாராயில்லை. உண்மையாகக் கூறுகிறேன். மக்களுக்குப் பாங்கிகளின் மீதுள்ள நம்பிக்கை போய்விடும். வரி கட்டுபவர்களைக் காட்டிலும் வரி கட்ட வேண்டிய அவசியமே இல்லாதவர்களும் எத்தனையோ பேர் பாங்கிகளில் கணக்கு வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கும் வரி போட்டுப் பணத்தைப் பிடித்துக் கொண்டு விட்டால், வரி விதிப்புக்கு உட்படாதவர்கள் என்பதை நிரூபித்துக் கொண்டு அவர்கள் வெளி வருவதற்குள் போதும் போதுமென்றாகி விடும். பாங்கியின்மீதுள்ள நம்பிக்கை குறைந்தாலும் குறையா விட்டாலும் 'நமக்கு எதற்கு வீண் தண்டா?' என்று ஒதுங்கிவிடவே முயலுவார்கள். பாங்கித் தொழில் படுத்துவிடும்.''

''பாங்கித் தொழில் படுக்கத்தான் தேசியமயமாக்கும் திட்டம் ஒன்று இருக்கிறதே!''

''மெய்தான்! எத்தனையோ தேசியமயமாக்கப்பட்ட தொழில்களின் லட்சணம் தெரிந்துதான் இருக்கிறது. அரசாங்க சம்பந்தப்பட்ட அலுவலாகி விட்டால் எப்படியோ சிவப்பு நாடா தலையெடுத்துவிடுகிறது. பைல்களை ஓரிடத்துக்கு ஓரிடம் நகர்த்துவது மலையைக் கெல்லி இடம் பெயர்த்து வைக்கும் காரியம்தான்.''

''பாங்கிகள், வாடிக்கைக்காரர்களுக்கு வேறென்ன வசதிகள் செய்து தருகின்றன?''

''இன்றையப் பொருளாதார நிலையில் மக்களுக்கு எத்தனையோ தொல்லைகள். அந்தத் தொல்லைகளிலிருந்து விடுபட பாங்கிகள் பயன்படுகின்றன. வீட்டு வாடகை, இன்ஷூரன்ஸ் பிரீமியம், எலெக்ட்ரிக் சார்ஜ், நூலகச் சந்தா, பத்திரிகைச் சந்தா என்று எத்தனையோ மாதா மாதம் கெடு தவறாமல் கட்டக்கூடிய காரியங்கள் இருக்கின்றன அல்லவா? எங்கள் வாடிக்கைக்காரர்கள் அந்தப் பொறுப்பை எங்களுக்குத் தந்தால் நாங்கள் கெடு தவறாமல் கட்டிவிடுவோம். இதற்கு 'ஸ்டாண்டிங் இன்ஸ்டிரக்ஷன்' எழுதித் தரவேண்டும்.''

''இந்த உதவிக்கு ஊதியத் தொகையாக அவர்கள் பற்றில் கணக்கு எழுதுவீர்களா?''

''மாட்டோம். தபால் செலவு போன்ற ஏதாவது செலவு இருந்தால் மட்டுமே



''ஏன் சார்! ரேடியோவிலே விளம்பரங்களை அனுமதிக்கப் போறாங்களாமே; முதல் விளம்பரம் என்னவாக இருக்கும், சொல்லுங்கள் பார்க்கலாம்?''

''ஏன், 'உங்கள் சரக்குகளை விளம்பரப்படுத்த சிறந்த சாதனம் அகில இந்திய ரேடியோவே'ன்னு இருக்கும்....வேறே என்ன?''

---

அவர்கள் கணக்கில் கழித்துக் கொள்ளப்படும். எங்களிடம் அவர்கள் இந்த உதவியை எதிர்பார்ப்பதற்கு அவர்கள் ஓர் உதவி செய்ய வேண்டும். அதாவது கணக்கில் பணம் குறையாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.''

''அதாவது பல கவலைகளையும் விட்டுவிட்டு அவர்களைப் பணக் கவலையை மட்டும் படச் சொல்லுகிறீர்கள்!''

''ஆமாம். அதையும் நாங்கள் பட முடியுமா? எங்கள் பாங்கில் மற்ற பாங்கிகளில் இல்லாத ஒரு திட்டம் இருக்கிறது. அதற்கு 'பிக்மி டிபாஸிட்' என்று பெயர். அன்றாட வருமானமுள்ளவர்கள் காய்கறிக் கடைக்காரர்களிடமிருந்து டாக்டர்கள், வக்கீல்கள் வரை எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள் அல்லவா? அவர்கள் நாள் ஒன்றுக்கு நாலணா முதற்கொண்டு எத்தனை ரூபாய் வேண்டுமானாலும் கட்டலாம். இப்படி ஏழு ஆண்டுகள் சேகரித்துக் கணிசமான தொகையைப் பெறலாம். அதோடு வட்டியும் சேரும். சமய சந்தர்ப்பங்களில் வேண்டுமானால் அவர்கள் அந்தக் கூடுதல் தொகையிலிருந்து ஓரளவுக்குக் கடனும் பெறலாம். இப்படி இந்தத் திட்டத்தில் சேருபவர்கள் தினமும் பாங்கியை நாடி வரவேண்டிய அவசியமில்லை. அவர்களை நாடி எங்கள் வசூலிப்பாளர்கள் செல்வார்கள். இப்படி வசூலிக்கும் வேலை ஓய்வு நேர வேலைதான். வசூலுக்குத் தக்கபடி கமிஷன் உண்டு. ஒருசிலர் மாதம் நானூறு ரூபாய்க்கும் மேலாகக் கமிஷன் பெறுகிறார்கள் என்றால் எங்களுக்கு எத்தனை டிபாஸிட்டுக்காரர்கள் இருப்பார்கள் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்களேன்! வசூல் உத்தியோகம் பார்ப்பவர்களிடம் நாங்கள் கணிசமான தொகையை டிபாசிட்டாகப் பெறுகிறோம். அவர்கள் மோசடியில் இறங்க முடியாது. இறங்கினால் அவர்களுக்குத்தான் நஷ்டம்!''

''நல்ல முறைதான். இப்படிப் பெண்களைக் கொண்டே இந்தக் கிளையை இயக்கும் நோக்கம் என்ன?''

''சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே! ஆண்களைக் காட்டிலும் பெண்களுக்குப் பொறுமை அதிகம். நயமும் உண்டு. ஆண்கள் சிலசமயம் பொறுமை இழந்து சள்ளென்று விழுவார்கள். பெண்கள் அந்த நிலையைத் தவிர்ப்பார்கள்!''

''என்ன இருந்தாலும் உங்கள் கட்சியை விட்டுக் கொடுப்பீர்களா?''

''கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும் எங்கள் கிளைக் கணக்குச் சான்று பகரும். பெண்கள் நடத்தும் பாங்கி என்பதனால் பல பெண்களும் இங்கே கணக்கு வைத்துக் கொண்டிருக்கிறார்கள். புள்ளி விவரம் வேண்டுமா? நாற்பது சதவிகிதமாகும்!''

''என்ன?''

''அதிசயமாக இருக்கிறதா? சமப் பாத்திரத்திலும் எவர்சில்வர் பாத்திரத்திலும் பட்டுப் புடவையிலும் வாயில் புடவையிலும் பணத்தைப் போடும் பெண்களா இப்படிச் செய்கிறார்கள் என்று கேட்கத் தோன்றுகிறதா? சொன்னால் நம்ப மாட்டீர்கள். பெண்ணுக்குக் கல்யாணம் குதிர்ந்த பொழுது பணத்துக்கு என்ன செய்வது என்று அயர்ந்து போய்விட்டார் ஒரு தந்தை. குடும்பச் செலவுக்காக அவர் தந்த பணத்திலிருந்தே மனைவி மிச்சம் பிடித்து வைத்திருந்த சேமிப்பு நிதியைப் பார்த்தபோது ஏற்பட்ட அதிசயத்தில் அவரால் பேசவே முடியவில்லை. கல்யாணம் முடிந்து விட்டதாகவே கருதினார். நான் கூறுவது வெறும் கற்பனைப் பொருளாதாரம் அல்ல. பெண்களும் ஆண்களுக்குச் சரிநிகர் சமானமாக நின்று வாழ்க்கை நடத்தக் கற்றுக்கொண்டு விட்ட காலம் இது. ஒருவருக்கு ஒருவர் பாரமாக இல்லாமல் பழகும் நாள் இது!''

இப்படி அடித்துக் கூறிய குமாரி பிரேமா ராவ் சென்னை தியாகராய நகரில் உள்ள சிண்டிகேட் பாங்கியின் மானேஜர். பொருளாதாரத்தைச் சிறப்புப் பாடமாகக் கொண்டு எம். ஏ. பட்டம் பெற்றவர். தந்தை நரசிம்மராவ் ஹைகோர்ட்டில் உத்தியோகம் பார்த்து ஓய்வு பெற்றவர். இவருக்கு ஒரு சகோதரி, அவரும் பாங்கித் தொழிலில் ஈடுபட்டவர். தாய்மொழி மராட்டி என்றாலும் குமாரி பிரேமாவுக்குப் பல மொழிகள் தெரியும்.

1961 ஆம் ஆண்டு இத் தொழிலில் புகுந்தார். மூன்று மாதங்கள் பாங்கித் தொழில் சம்பந்தமான கல்வியும் ஆறு மாதங்கள் நேரிடைப் பயிற்சியும் பெற்றார். 1963ஆம் ஆண்டு பெண்கள் கிளை தொடங்கியதிலிருந்து தியாகராய நகர் கிளையில் பணியாற்றுகிறார். இவரோடு பதினைந்து பெண்கள் சிறப்பாகப் பணி புரிகிறார்கள்.

''செல்வத்துக்கும் திருவுக்கும் தொடர்பு உண்டு. பெண்களுக்கும் லக்ஷ்மிக்கும் உறவு உண்டு. எனவே திருவும் செல்வமும் உறவாடும் தொழிலிலே பங்குபற்ற பெண்களாகிய எங்களுக்கு உரிமை உண்டு'' என்று கூறும் இவர் உரிமையைத் தடுக்க நாம் யார்?



# கடலுக்கு அடியில் சாலை

**நிலப் பரப்பில் ஊடுருவிக் கொண்டு கடல் உட்புகுந்துள்ள ஓரிடத்தில் அமைந்துள்ளது இந்த அதிசயமான சாலை**

அமெரிக்காவின் கிழக்குக் கடற்கரையோரம். நார்போக் நகரிலிருந்து சார்லஸ் முனைக்குப் போவதென்றால் அட்லாண்டிக் சமுத்திரத்தைக் கடந்துதான் செல்ல வேண்டும். மோட்டார் கார்கள் படகுகளில் ஏற்றப்பட்டு அக்கரைக்குக் கொண்டு செல்லப்பட்டன. கடலைக் கடக்க ஒன்றரை மணி நேரம் ஆயிற்று என்றால் படகில் இடம் பிடிக்கக் காத்திருக்கும் நேரம் ஏறக்குறைய அதே அளவுக்கு ஆகிவிடும். இல்லையெனில் ரிச்மாண்ட், வாஷிங்டன், பால்டிமூர் ஆகிய நகரங்களின் வழியாக 70 மைல் சுற்றி வளைத்துக் கொண்டு போக வேண்டும். அந்நகரங்களின் சாலைகளில் கார்களின் நெரிசல் அதிகம். மிகவும் காலதாமதமாகும்.

பொறி இயல் நிபுணர்கள் இந்தச் சிக்கலை நீக்கி இருபத்தைந்து நிமிடங்களில் இக்கடல் பகுதியைக் கடக்க வழி செய்திருக்கிறார்கள். கடல் மீதாகப் பாலம் அமைத்தால் கடலில் கப்பல் போக்குவரத்து பாதிக்கப்படலாம் அல்லவா? ஆகவே கடல் மீதாகப் பாலம் கொஞ்ச தூரத்துக்குச் சமைத்த பிறகு அங்கே செயற்கையாக ஒரு தீவு உருவாக்கினார்கள். இந்தச் செயற்கைத் தீவிலிருந்து தொடங்கிக் கடலுக்கடியில் சாலை போட்டார்கள். இதற்காகப் பிரும்மாண்டமான இரும்புக் குழாய்களைக் கடலின் அடிவாரத்தில் கொண்டு சென்று ஒன்றுடன் ஒன்று இணைத்துப் பொருத்தினார்கள். கடலில் மூழ்கிச் சென்று இவற்றைப் பொருத்தி முடித்த பிறகு இதன் மீது காங்கிரீட் கலவையைக் கொட்டி, புயல், கடல் கொந்தளிப்பு ஆகியவற்றால் பாதிக்கப்படாதவாறு மூடினார்கள். இந்த இரும்புக் குழாய்களின் நடுவே சாலை அமைந்துள்ளது. அதற்கு மேலும் கீழும் காற்றோட்டத்துக்கு வழி செய்திருக்கிறார்கள்.

○●○




இவ்விதம் கடலின் அடிவாரத்துக்குக் கீழே சாலை அமைந்திருப்பதால் மேலே கடலில் கப்பல் போக்குவரத்து பாதிக்கப்படுவதில்லை. குகைப் பாதை மற்றொரு செயற்கைத் தீவில் மேலேறி வந்து பின்னர் பாலத்தின் மீதாகத் தொடர்கிறது. இன்






விதம் இரண்டு இடங்களில் கடலுக்கு அடியில் மாபெரும் இரும்புக் குழாய்களின் ஊடேயும் மிக நீளமான பாலங்கள் மூன்றின் மீதாகவும் இந்தப் பாதை அமைந்துள்ளது. மொத்தம் பதினேழரை மைல் தூரத்துக்கு இப்பாதை கடலுக்கு மேலும், கடல் மீதும் கடலின் ஊடாகவும் கடலின் அடிவாரத்திலும் உருவாகியுள்ளது.

உலகில் மிக நீளமான குகைப் பாதை—பாலம் இது. பொறி இயல் துறையில் நிகழ்ந்த ஓர் அற்புதமாகவே இதனைக் கருத வேண்டும்.

இந்தக் குகைப் பாதை — பாலத்தைக் கட்டுவதற்கென்றே பிரத்தியேகமாக ராட்சத இயந்திரங்கள் உருவாக்கப்பட்டன.

இதனைக் கட்டி முடிக்க மூன்றரை ஆண்டுகள் ஆயின. இந்த அசுர சாதனையில் ஈடுபட்டிருந்த எண்ணற்றவர்களில் ஏழு பேர்கள் உயிரிழந்தார்கள். பொறி இயல் நிபுணர்களடங்கிய ஆறு மிகப் பெரிய கம்பெனிகள் ஒத்துழைத்து இதனை உருவாக்கின.

இத்தனையிலும் ஒரு விசேஷம் என்ன தெரியுமா? இதில் அரசாங்கம் எந்த விதத்திலும் சம்பந்தப்பட்டிருக்கவில்லை. மக்களின் வரிப் பணம் ஒரு பைசாக்கூட செலவாகவில்லை. சில வர்த்தகர்களும் அரசியல்வாதிகளும் சேர்ந்து இருநூறு மில்லியன் டாலர் பெறுமானமுள்ள பத்திரங்களை மக்களுக்கு விற்றுப் பணம் திரட்டினார்கள். ஆம், இதைக் கட்டி முடிக்க அவ்வளவு செலவாயிற்று!

—'' ஸ்பேன் ''

---



# மர்மம் என்ன?

அவர்கள் ஏழெட்டுப் பேர்கள் — வாலிபர்கள் — தினம் கால்பந்து ஆடி விட்டுப் பகபதி ஹோட்டலில் சிற்றுண்டி அருந்துவார்கள். சர்வர் 'தொந்திக் கணபதி'தான் இவர்களைக் கவனித்துக் கொள்வார்.

வாலிப முறுக்கு; உடம்பில் தெம்பு; தாமாகவே கணக்கெழுத மாட்டார்கள். 'தொந்தி'தான் குறித்துக் கொள்வார்.

மாதம் ஒன்பது, பத்து ரூபாயாகும். நோட்டைக் கொடுத்து விட்டுச் சில்லறை வாங்காமலே கூடப் போய் விடுவார்கள்.

கோஷ்டியில் கோவிந்துவும் ஒருவன். தமிழக மொழியில் 'மத்திய முன்னால்' விளையாடுவான். மகா முன்கோபி.

ஒரு மாதம் கணக்கு பதினைந்து ரூபாய் ஐம்பது பைசா காட்டியது. வாக்குவாதம் மூண்டது.

கோவிந்து கேட்டான்: ''என்னய்யா தப்புக் கணக்கு எழுதியிருக்கே?''

''ஒருகாலும் இல்லே ஸார். ஏழு வருஷமா எழுதிண்டு வருகிறேன். ஒரு தடவைகூடத் தப்பானதில்லே ஸார்.''

''மாசம் ஒன்பது ரூபாய்க்கு மேல் ஆகாது. இந்த மாசம் பதினைந்தரை ரூபாய் ஆவானேன்?''

''ஒரு நாள் நீங்கள் 'பார்ட்டி' கொடுத்தேளே!''

''அது வெறும் கூல் டிரிங்ஸ்தானே. ஆறு ரூபாய் எப்படி ஏறும்?''

''ஓங்களுக்கு நம்பிக்கை இல்லேன்னு ஒண்ணுமே கொடுக்க வேண்டாம், கோவிந்து ஸார்.''

''உன் தர்மம் எனக்கு வேண்டாம். எனக்குக் கணக்கைப்பார்க்கணும்.''

''வேண்டாம், ஸார். அவ்வளவு நாணயமற்றுப் போகவில்லே இங்கே!''

''கணக்கைக் காட்டுய்யான்னு! எத்தனை நாளாப் பொய்க் கணக்குன்னு பார்த்துட்டாப் போறது இன்னிக்கு. வெட்டு ஒண்ணு துண்டு ரெண்டுன்னு இன்னிக்குத் தீர்ந்துடணும்.''

''வேண்டாம், ஸார்! வேண்டாம்! நம்ம சிநேகம் கெட்டுப் போகும். அப்புறம் பின்னாலே வருத்தப்படுவேன்!''

வாக்குவாதம் முற்றிற்று.

''ஹோட்டல் சர்வர் கிட்ட எங்களுக்கு என்னய்யா சிநேகம். எடு கணக்குப் புத்தகத்தை.''

இப்படிச் சொல்லிக் கொண்டே, கோவிந்து, சர்வர் கையிலுள்ள கணக்குப் புத்தகத்தை வெடுக்கென்று பிடுங்கினான். தன் பக்கத்தைத் திறந்து பார்த்தவன் பேயறைந்தவன் போல் நின்றான்.

தொந்திக் கணபதி கணக்குப் புத்தகம் தராததின் மர்மம் அவனுக்கு அப்போதுதான் விளங்கிற்று!

மேலே 'குரங்கு கோவிந்து' என்று அடையாளக் குறியுடன் அவன் பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. ஹோட்டலிலே பல கோவிந்துகள் வருவார்கள் போலும்!

- கப்புடு

மூன்றாவது பரிசு நாவல்

# மணக் கோலம்

ப.வி.ஆர்

## அத்தியாயம் 15

"சந்தானம் சொல்லிக் கொடுத்துத் தான் இந்தப் பெண் ஜானு இப்படித் தலைவிரித்தாடுகிறாளோ?" என்று எண்ணினாள் பாகீரதி.

குங்குமச் சிமிழைக் கையில் எடுத்துக் கொண்டு வந்த சீதா அதை அவசரப் பட்டுக் கொண்டு நீட்டாமல் இருக்க, ஜானு அதைப் பறித்துக் கொண்டு அலமேலு பக்கம் திரும்பினாள்.

"என்ன பாகீரதி? உன் பெண் என்னவோ கேட்கிறாளே, என்ன சேதி?"

"அது எனக்குத்தான் சொல்லத் தெரியும், மாமி!"

"என்னது?"

"உங்களுக்குப் புரசைவாக்கத்திலே கலியாணராமன் வீட்டாரைத் தெரியும் இல்லியா.....?"

"ஆமாம்!"



''அவருடைய சம்சாரத்துக்குக்கூட, அதுதான் பர்வத மாமி.....!''

''தெரியும் சொல்லு....!''

''அவள் தங்கைக்கு — ரயில்வேயிலே வேலையாக இருக்கிறானே அவனுக்கு— நீங்கதானே கலியாணம் நிச்சயம் பண்ணிக் கொடுத்தீர்கள்....?''

''ஆமாம், நானேதான். விசாலத்துக்குத்தானே சொல்றே நீ.... ஆனால் கடைசியிலே நடக்காமப் போயிடுத்து.''

ஜானு திடீரென்று குரலை மாற்றினான்.

''ஏன் மாமி நடக்காமப் போச்சு?''

''அதை யார் கண்டார்கள்?''

''பிள்ளைக்கு ஒரு காது முழுச் செவிடாமே.....!''

''அது எனக்குத் தெரியாது.''

''அது தெரியாமலா விசாலத்து வீட்டாரிடம் அந்தப் பிள்ளைக்காக நடக்காத நடையெல்லாம் நடந்தீர்கள்? அது போகட்டும். அந்தக் கலியாணம் நடக்கணுமானால் இருநூறு ரூபாய் உங்களுக்கு உடனடியாகத் தரணும்னு சொன்னீர்களாமே!''

அடுத்தகணமே அலமேலு மாமிக்கு அழுகை வந்தது. ''பார்த்தாயாடீ, பாகீரதி! நான் என்னமோ என் உடம்பாலே உழைச்சு நல்லவர்களுக்கு நாலு செய்யணும்னு போனால் இந்த மாதிரி அபாண்டமெல்லாம் காதிலே விழறது. நான் என்ன சத்தியம் பண்ணிக் கொடுத்தாலும் யாருடீ நம்புவா என் வார்த்தையை?'' அவளுடைய கண்களிலிருந்து இப்பொழுது தாரை தாரையாக நீர் கொட்டியது.

பாகீரதி பதைபதைத்துப் போனாள். சீதா திகைத்தாள். ஜானு, தன்னுடைய குற்றச்சாட்டுக்கு, அலமேலு கோபமாகத்தான் பதில் அளிப்பாள் என்று எதிர்பார்த்தாள். கோபத்துக்குப் பதிலாக அழுகை வரவே, அவளும் ஒருகணம் அயர்ந்து போய்விட்டாள். ஆனால் அடுத்த கணமே இதெல்லாம் நினைத்த மாத்திரத்தில் சில ஸ்திரீகளால் வரவழைக்க முடிந்த அழுகை என்று அவளுக்குப் பட்டது.

''நீங்க அழறதைப் பார்த்தால் எனக்கும் வருத்தமாகத்தான் இருக்கு மாமி. ஆனால், அந்தப் பர்வத மாமியின் பெண் சித்ரா இருக்காளே, அவள் என்னுடைய சிநேகிதி. அவர்கள் யாரும் பொய் சொல்ல மாட்டார்கள். இது எப்போ, எங்கே, என்னிக்கு, எத்தனை மணிக்கு நடந்தது என்கிற விவரங்களையெல்லாம் சொல்லட்டுமா? கேட்கிறீர்களா?'' நிறுத்தி நிதானமாகக் கோவையாக ஜானு சவால் விடுத்தாள்.

அந்தச் சவாலை ஏற்க முடியாமல் அலமேலு, ''பாகீரதி... நான் வரேன், அம்மா! ஏதோ சிநேக தர்மத்துக்கு நான் என் தலையிலே இழுத்துப் போட்டுண்டேன். அது என் முட்டாள்தனம். உன் பெண் நல்ல பாடமா கத்துக் கொடுத்துட்டா. இனிமே, நீங்களே இந்தக் கலியாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் வேணுமானால் செய்து கொள்ளுங்கள். என் அண்ணா பிள்ளைகிட்டேயும், 'நீயே பார்த்துக் கொள்ளடா'ன்னு சொல்லிடறேன்!'' என்று கம்மிய குரலில் விசும்பலுக்கும் விக்கலுக்குமிடையே கூறினாள்.

பாகீரதியும் சீதாவும் வாய் திறவாமல் நிற்கவே, அலமேலு அம்மாள், ''யார் போதனையிலே இந்தப் பெண் இப்படி யெல்லாம் என்னை இந்த வயசிலே நிறுத்தி வைச்சு அடிக்கிறதோ... உம்... என் தலை எழுத்து! சொல்லுடீ அம்மா.... நன்னாச்சொல்லு. உன்னைச் சொல்லிப் பிரயோசனமில்லே.... உன் மனசிலே இது மாதிரியெல்லாம் உருவேத்தி வைச்சிருக்கா பாரு, அவர்களைச் சொல்லணும்!'' என்று குரல் சற்றுத் தெளிவாகக் கேட்குமாறு சொன்னாள். பிறகு மெதுவாக ரேழியை நோக்கி நடந்தாள்.

''ஜானு, கையிலேயே வைச்சுண்டிருக்கியே! மாமிக்குக் குங்குமம் கொடுடீ'' என்றாள் கமலா திடீரென்று சிரிப்பும் கடுமையும் கலந்த ஸ்தாயியில்.

கமலாவின் கிண்டலை உணர்ந்து தானோ, இல்லை ஜானுவின் மேலிருந்த வெறுப்பினாலோ அலமேலு அம்மாள் குங்குமம் வாங்கிக் கொள்ளாமலேயே வெளியேறினாள்.

அடுத்த நிமிஷமே, தாயார் ஆத்திரம் தீரத் திட்டப் போகிறாள் என்று தான் ஜானு எதிர்பார்த்தாள். ஆனால் பாகீரதி அம்மாள், பெண்ணோடு பேசிச் சமாளிக்க முடியாது என்று தானோ என்னவோ சமையலறைப் பக்கம் திரும்பினாள்.

''ஜானு, இனிமே இந்த மாமி இந்த வீட்டுப் பக்கம் தலை வைச்சுப் படுக்க மாட்டாள்!'' என்றாள் கமலா. அவளுக்குப் பரம திருப்தி! ஏன், ஜானுவைக் கண்டு பெருமையும்கூட! சொன்னபடி அப்படியே செய்து விடுகிறவளாச்சே ஜானு!

''நீ அனாவசியமா விரோதத்தைச் சம்பாதிச்சுட்டே!'' என்றாள் சீதா.

''நீ போ அக்கா! இந்த அலமேலு மாமியைப் போல இருக்கிறவர்களுக்கெல்லாம் சூடு, சுரணை கிடையாது. நாளைக்கே இளிச்சுண்டு வந்து

# குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ

# ஃபாஸ்ஃபோமின்®

ஃபாஸ்ஃபோமின் பழரஸ மணம் கமழும் பச்சை நிற வைட்டமின் டானிக். இதில் வைட்டமின் 'பி' காம்ப்ளெக்ஸ் மற்றும் பலவகை கிளிஸரோ ஃபாஸ்பேட்டுகள் கலந்துள்ளது. இதுவே குடும்பத்தினர் அனைவரும் வலிவுடனும், சந்தோஷத்துடனும், ஆரோக்கியமாயும் வாழ உதவுவது. ஃபாஸ்ஃபோமின் வீட்டில் வையுங்கள். இதை அருந்தி வந்தால் களைப்பும் சோர்வும் உங்களை அணுகாது. இழந்த சக்தியை மீண்டும் பெற உதவுகிறது. பசியைத் தூண்டும். வலிவைப் பெருக்கும். நோய்களை எதிர்க்கும் சக்தியை அளிக்கும். குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியத்துடன் திகழ—ஃபாஸ்ஃபோமின்.




SQUIBB® TTT®

® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்பொரேட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்காகும். ஸாராபாய் [illegible] பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றுள்ளனர்.

SARABHAI CHEMICALS

Shilpi SC 28/ A Tam

திற்கும். நீலிக் கண்ணீர் வடிச்சாளே, அந்த அழுகைதான் உன் கண்ணுக்குத் தெரிந்து காதிலே கேட்டதே தவிர, அவள் முகத்திலே துக்கமோ, குரலிலே ஒரு சோகமோ இருந்ததா? அவ்வளவும் வேஷம்!''

''ஜானு! அவ சிரிச்சாலும் வேஷம்னு சொல்றே? இப்போ அழுதாலும் வேஷமா? உனக்கு அவளைக் கண்டால் பிடிக்கல்லே போலிருக்கு!'' என்றாள் கமலா. ஜானுவை எதிர்த்துப் பேசினால்தான், ரசமான பதில்கள் வரும் என்று அவளுக்குத் தெரியும்.

''ஆனா ரெண்டு விதமா நம்ப வைக்கலாம். ஒண்ணு கண்ணியமான நடத்தையாலும், பரிசுத்தமான பேச்சாலும். எந்தப் பேச்சு நெஞ்சிலிருந்து வருகிறது, எது நுனி நாக்கிலிருந்து வருகிறதுன்னு பேசுகிறவனுடைய சத்தமே சொல்லி விடும். நுனி நாக்கிலிருந்து பேசுவது இரண்டாவது கோஷ்டி. மின்சாரம் பாயற வேகத்திலே கோவையாகப் பொய் சொல்ல அவர்களால் முடியும். இந்த நிமிஷம் சிரிப்பு. அடுத்த விநாடி அழுகை. நான் சுமத்தின குற்றம் அபாண்டம்னு அவள் நெஞ்சம் அறிந்திருந்தால் அழுகையும் வரலாம், கோபமும் வரலாம். ஆனால் அதற்கு முன்னாலே ஒரு திகைப்பு வரும். ஏன், ஸ்தம்பித்துப் போய் விடுவார்கள். இந்த மாமி, நான் சொல்லச் சொல்ல அழுகையைத் திட்டம் போட்டுத் தயார் செய்து கொண்டிருக்கிறாள்.''

''ஜானு ஹியூமன் சைக்காலஜியிலே 'ரிஸர்ச்' பண்ண வேண்டியவள். போஸ்டாபீசிலே கார்டையும், கவரையும் விக்கிறே!'' என்றாள் கமலா.

சீதாவின் மனம் எப்போதும்போல் குழம்பியது. அவள் சந்தானத்தின் அறையை நோக்கிச் சென்றாள்.

மூன்றாம் நாள் சாயங்காலம் ஜானு வீடு திரும்பியதும் கமலா, ''உன் வாய்க்குச் சர்க்கரைதான் போடணும் ஜானு!'' என்றாள்.

''எதற்கு?''

''இன்னிக்கு அ. மாமி வந்தாள்!''

''என்ன சொன்னாள்?''

''முதல்லே மூந்தா நாள் நடந்ததைப் பத்திச் சொல்லி ஒரு பாட்டம் அழுதாள். அப்புறம் அம்மாதான் இருக்கிறாளே! தானும் அழுது சமாதானப் படுத்தி, சுடச் சுடத் தோசையும் வார்த்துப் போட்டு, கூழ் மாதிரி காப்பியும் கொடுத்தாள்.''

''என்ன சொன்னான்னு கேட்டேன். நம்ம அம்மா இதெல்லாம் செய்வான்னு எனக்குத் தெரியாதா?''

''பழைய பல்லவியிலிருந்து அநுபல்லவிக்கு வந்திருக்கிறாள். இந்த மாசக் கடைசியிலே நல்ல முகூர்த்தங்கள் இருக்காம். அடுத்த மாசம் பிள்ளையாண்டானுக்குஒத்துக்காதாம்!''

''அவ்வளவு தூரம் முன்னேறியாச்சா?''

''பழநியில்தான் கலியாணத்தை வைச்சுக்கணுமாம். நாமெல்லாம் பழநி பார்க்க ஒரு சந்தர்ப்பம்!''

ஜானு தன்னுள் யோசனை பண்ணிக் கொண்டே நகர்ந்தாள். சித்ராவின் தாயார் ஏற்கனவே சொல்லியிருந்ததைவிட அதிகம் ஒன்றும் தெரியவில்லை, அலமேலு அம்மாளைப் பற்றி.

இனி என்ன செய்வது?

ரகுபதியை நேரிலேயே பார்த்துப் பேசினால் என்ன? சந்தானம் பார்த்து விட்டுத் தனக்குப் பட்டதைச் சொல்லியிருக்கிறான். அதை அம்மா ஏற்றுக் கொள்ளவில்லை. பிள்ளையே சீதாவைச் சந்தித்திருக்கிறான். ஆனால் சீதா தனக்குப் பிடிக்கவில்லை என்பதை அழுத்தம் திருத்தமாக அடித்துச் சொல்ல மாட்டேன் என்கிறாள்! ஒரு பணக்காரப் பிள்ளைக்கு வாழ்க்கைப்பட்டால், இரு தங்கைகளுக்கும் அநுகூலமாக இருக்கும் என்று அம்மா நினைப்பதைப் போலவே நினைக்கிறாள். ஏன், ஒருவித தியாகத்துக்குக் கூடத் தன்னைத் தயாராக்கிக் கொண்டு விட்டாள் சீதா!

அம்மாவின் இஷ்டத்தை மாற்ற முடியாது. அது நிச்சயம். சந்தானத்தை — பத்து வருடங்களாக, இது போல் இல்லை என்று பழகிவிட்ட அவனை — அறவே வெறுக்கும் அளவுக்கு அம்மா மனம் இந்தச் சம்பந்தத்தில் ஈடுபட்டிருக்கிறது என்றால், அந்தத் தீர்மானத்தை ஜானுவால் அசைக்க முடியாது.

ஆனால் அடிப்படையான முயற்சியையே தாக்கினால்? எப்படி அவள் ஒருத்தியால் முடியும்? சித்ரா சொன்ன செய்தி ஒரு பெரிய கருவி என்று நினைத்தாள் ஜானு. ஆனால் அது கடைசியில் பிசுபிசுத்துப் போய் விட்டதே!

சீதாவின் உள்ளுணர்வு அலமேலு மாமியின் அழுகையை நம்ப மறுக்கிறது என்பதை ஜானு உணர்ந்தாள். ஆனால் அதில் என்ன வெற்றி கிடைத்து விட்டது? அம்மாவும் ஒரு வேளை அலமேலு மாமி மீது சந்தேகப்பட்டிருக்கலாம்! இருந்தாலும் என்ன நடந்து விட்டது? பழநியில் அந்த மாதமே கலியாணத்தை நடத்திவிட

வேண்டும் என்ற முடிவுக்குத்தானே முன்னேறியிருக்கிறது !

இனி என்ன செய்வதாக இருந்தாலும் ஜானுவால் தனியாக இருந்து செய்ய முடியாது. உதவி தேவை. ஆனால் உதவி செய்கிறவனுக்குத் தைரியமும், நிதானமும், சிரத்தையும் இருக்க வேண்டும். இவை சந்தானம் ஒருவனிடம்தான் இருக்கின்றன.

ஆனால் அவன் தனித்து, சம்பந்தப்படாதவனைப் போல் இருக்கிறானே ? அவள் போய் மன்றாடினாலும் 'சீதாவே சரி என்று சம்மதித்தப்புறம், எனக்கு எப்படி உன் யோசனையில் அக்கறை இருக்க முடியும்?' என்று அவன் கேட்டு விட்டால் என்ன செய்கிறது ?

இரண்டு மூன்று தினங்களுக்கு, ஜானுவால் சிந்திக்கத்தான் முடிந்ததே தவிர வேறு ஏதும் காரியார்த்தமாகச் செய்ய இயலவில்லை. இரண்டு தடவைகள், சந்தானத்திடம் பேச்சுக் கொடுத்துப் பார்த்தாள். அவன் பிடி கொடுத்துப் பதில் சொல்ல வில்லை.

ஜானு கலங்கிப் போனாள். முதன் முதலாகச் சந்தானம் தனது அபிப்பிராயத்தை வெளியிடாமல் இருந்திருந்தாலோ அல்லது சித்ரா தன் சித்தியின் வரவைப் பற்றிய செய்தியைக் குறிப்பிடாதிருந்திருந்தாலோ, ஜானுவுக்கு எந்தவிதக் குழப்பமும் தோன்றியிராது. அவளும் மற்றவர்களைப் போல் நடந்து கொண்டிருப்பாள். அக்காவுக்குப் பிள்ளையைப் பிடிக்கவில்லை, இருந்தாலும் இசைந்து விட்டாள் என்ற ஓர் எண்ணம்தான் இருந்திருக்கும்.

ஆனால் இப்போது ஜானுவால் சும்மா பார்த்துக் கொண்டு போக முடியவில்லையே? அதுவும் நேருக்கு நேர் அலமேலு மாமியைக் கூண்டில் ஏற்றிக் கேள்விகளெல்லாம் கேட்டபின் பயமும் சந்தேகமும் பன்மடங்கு அதிகமாக அல்லவா வளர்ந்து விட்டன ?

கடைசியில் ஒரே ஒரு முடிவுக்குத் தான் வந்தாள்.

அவளே சந்தானத்தின் துணையுடன் ரகுபதியைச் சந்தித்து விடுவது! அதனால், மனத்திலிருந்த சந்தேகங்களும், பயமும் தீர்ந்தால் அவளுடைய கவலைகளெல்லாம் மறைந்து விடும். அலமேலுவின் வேகம் அநாவசியம், இதில் ஏதோ மர்மம் இருக்கிறது என்றெல்லாம் அவள் கொண்டிருக்கும் கருத்துக்களை அவள் மறந்து விடுவாள்! ஏன் அலமேலு அம்மாளிடம் மன்னிப்புக் கூடக் கேட்பாள்.

ஆனால் இதற்கெல்லாம் வாய்ப்பே பிறக்காது என்று அவளுடைய மனம் எடுத்துக் கூறியது.

**அ**ன்று நான்கு மணிக்கே காரியாலயத்தை விட்டு வந்த ஜானுவிடம், ''இந்த மாசம் இருபத்தெட்டாம் தேதி



பழநியிலே....'' என்று நிறுத்தினாள் கமலா.

''அம்மா சரின்னு சொல்லிட்டாளா ?''

''அக்காவைக் கேட்டுவிட்டுச் சொல்றேன்னு !''

''அக்காவைக் கேட்டாச்சா ? அவ லீவ் எடுக்கப் போறேன்னுளே ?''

''ஆமாம், லீவுதான்! மத்தியானம் ஒரு மணிக்கே போனவள்.... இன்னும் காணோம்.....!''

''அம்மா அவகிட்டே கேட்டாளா?''

''உம்....!''

''என்ன சொன்னுள் ?''

'' அக்கா என்ன சொல்லியிருப் பான்னு உனக்குத் தெரியாதா? 'உன் இஷ்டம் அம்மா' என்றுள்.''

''பதிமூணு பதினுலு பொங்கல். அப்புறம் இரண்டு வாரங்கள் தான் இருக்கு....!''

''இன்னியிலிருந்து சரியா....!''

கமலா எண்ணி முடிப்பதற்குள், இடைமறித்த ஜானு, ''கமலா, நான் டிரஸ் பண்ணிண்டு வெளியே போயி றேன். இன்னிக்கு இரண்டிலே ஒண்ணு பார்த்துடலாம்னு இருக்கேன் !'' என்றுள்.

''நீயும் தலைகீழாகத்தான் நின்னு பார்க்கிறே.....''

''இல்லே, இன்னிக்குச் சந்தானமும் நானுமா யோசனை பண்ணி ஒரு முடிவைக் கொண்டு வரப் போகிறோம்......!''

''அவர் இனிமேல் இந்த விஷயத் தில் தலையிடுவார்னு எனக்குத்தோணலே. அதுவுமில்லாமல், அம்மா முன்னே பணம் கேட்டிருந்தாள் போலிருக்கு.... அதைச் சீதாவும் இரண்டு மூணு நாள் முன்னுலே ஞாபகப்படுத்தி வைச் சிருக்கா. சந்தானம் தரேன்னுகூடச் சொல்லியிருக்கார்.....!''

''கமலா! அவர் பணம் தராமலிருந் தால் கலியாணம் இப்போதைக்கு நடக்காது இல்லியா....?''

''அவரா தராமலிருப்பார் ?''

''தரவில்லேன்னு வைச்சுக்கோ — ''

''அப்போ நடக்காமல் போகலாம். ஆனுல் ரகுபதி, தானே பண உதவி செய்ய முன் வந்தால்?''

'' நீ சொல்கிறதிலேயும் பாயிண்டு இருக்கு. இவ்வளவு தூரம் வந்தவர்கள் என்ன வேணுமானுலும் செய்வார்கள்.''

''ஏன் ஒற்றைக் காலால் அலமேலு மாமியும் ரகுபதியும் நிற்கிருர்களென்று எனக்குத் தெரியவில்லே !''

''அதுதாண்டீ, எனக்கு அன்னியி லிருந்து மர்மமா யிருக்கு. ஒரு வேலே அவனைத் தெரிந்தவர்கள் யாரும் பெண் கொடுக்க இசைந்திருக்க மாட்டார்கள். ஏழைக் குடும்பமானுலும், நல்ல குடும்ப மாக இருக்கிறதே என்று அலமேலு மாமி சிபாரிசு செய்திருப்பாள்.... அவனும் சம்மதித்திருப்பான்.''

''இப்போ நீ என்ன செய்யப் போறே? சந்தானத்திடம் பணத்தைக் கொடுக்காதேன்னு மட்டும் சொல்லி வைக்காதே! அக்கா மனசு ரொம்பக் கஷ்டப்படும்.....!''

''பார்க்கலாம். அக்கா எங்கேதான் போனுள்னு உனக்குத் தெரியாதா?''

''ஊஹூம்.... நானும் உன்கூட வரட்டுமா ?''

''வேண்டாம். அம்மாவிடம் எதுவும் இப்போ சொல்லக் கூடாது. தெரிந்ததா?''

'' உம்....!''

''நான் இப்போ சந்தானத்தை அவருடைய கம்பெனியிலே 'மீட்' பண்ணப் போறேன். இதைச் சொன் ஞல் அம்மாவுக்குப் பற்றிக் கொண்டு வரும். ஏற்கனவே என்னிடம் சரி யாகப் பேசாமல் இருக்கிறுள்.....''

''சரி....!''

டிரஸ் செய்து கொண்ட பிறகு வெளியேறிய ஜானு, சந்தானம், ஆபீஸில்தான் இருக்கிருன் என்பதைத் திடப்படுத்திக் கொள்ள, ஒரு மருந்துக் கடையிலிருந்து போன் செய்தாள். அதற்குப்பின் அவள் ஒரு டாக்ஸியைப் பிடித்துச் சென்றுள்.

தேவி கம்பெனியை அடைந்தபோது, தான் சொல்லியிருந்த நேரம் கடந்து கால் மணி நேரத்துக்கு மேலாகிவிட் டதை உணர்ந்த ஜானு அவசரம் அவசர மாக மாடிப் படிகளில் ஏறி, கம்பெனி யின் காரியாலயத்துக்கு வந்து சேர்ந் தாள்.

முன் அறை வெறிச்சோடியது. நான்கு விளக்குகளில் ஒன்றுதான் எரிந்து கொண்டிருக்கவே, அவள் ஒரு விஞடி நேரம் தயங்கிவிட்டு முன் னேறினுள்.

''ஒன் மினிட் ப்ளீஸ் !'' என்ற குரல் திடீரென்று எழுந்தது. ஜானு எரியும் விளக்குப் பக்கமாகத் திரும் பிப் பார்த்தாள். ஆனுல் அடுத்த கணமே இருட்டு இருக்கும் மூலையி லிருந்துதான் குரல் வந்தது என்பதை உணர்ந்து கொண்டாள்.

அவள் யார்தான் குரல் கொடுத் தார்கள் என்று அறிவதற்குள், சேஷனே, அவள் முன்னுல் வந்து நின்றுன். (தொடரும்)



கல்கத்தா, பாரதி தமிழ்ச் சங்கத்தின் முன்னாள் தலைவர் ஸ்ரீ டி. எஸ். சிதாபதி அவர்களின் குமாரரும், இந்தியன் டென்னிஸ் சாம்பியன் ஸ்ரீ ராமனுதன் கிருஷ்ணன் அவர்களின் மைத்துனருமான ஸ்ரீ ஜானகி ராமன் அவர்கட்கும் ஸ்ரீ கே. ராமலிங்கம் அவர்களது குமாரத்தியும், காலஞ்சென்ற ஜஸ்டிஸ் சி. என். குப்புஸ்வாமி அய்யர் அவர்களது பேத்தியுமான சௌ. நீலாயதாக்ஷிக்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!



கல்கி காரியாலயச் சைத்திரிகர் ஸ்ரீ சாமா அவர்களின் குமாரத்தி சௌ. இந்திராவுக்கும் திரு ஜி. சுவாமிநாதய்யர் புதல்வரும் பம்பாய், பாபா ஆடோமிக் ரிசர்ச் சென்டரில், உதவி இஞ்சினியராகப் பணிபுரிபவருமான ஸ்ரீ S. விஸ்வநாதன், B.E.க்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!



பம்பாய் இந்தியன் எக்ஸ்பிரஸ் லிட். ஜெனரல் மானேஜர் ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ணுவின் குமாரத்தி சௌ. ரஜனிக்கும், ஆறுமுகமங்கலம் டாக்டர் எஸ். சுப்பிரமணிய அய்யரின் குமாரனும் நெய்வேலி கார்ப்பொரேஷன் லிமிடெட் ஜூனியர் என்ஜினியருமான சி. எஸ். சங்கரனுக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தது. முகூர்த்தத்துக்கு நண்பர்களும் உறவினர்களும் வந்திருந்து தம்பதிகளை ஆசிர்வதித்தனர்.



மேட்டூர் கெமிகல்ஸ் சோப் பிரிவு அதிகாரியும் நங்கவரம் மிராசுதாருமான ஸ்ரீ என். வி. கணபதியின் குமாரர் சிரஞ். ராமமூர்த்திக்கும் நாமக்கல் ஏ. கே. எஸ். மணியின் குமாரி சௌ. ராதாரமணிக்கும் அண்மையில் நாமக்கல் காரனேஷன் கல்யாண மண்டபத்தில் திருமணம் நடந்தது. அதையொட்டி சென்னை, அசோகா ஹோட்டலில் 18-6-67 அன்று ஒரு வரவேற்பு நடைபெற்றது. பல பிரமுகர்கள் வந்து தம்பதிகளை ஆசிர்வாதம் செய்தனர்!



## சர்க்கஸ் உலகம் (ஆங்கிலம்)

‘சாமுவேல் புரான்ஸ்டன்’ என்பவர் ஏராளமான பொருட் செலவில் திரைப் படங்களைத் தயாரிக்கத் தயங்காதவர். சர்க்கஸ் சூழ்நிலையைக் கொண்டதொரு படத்தை எடுத்திருக்கிறார். பார் விளையாட்டு மிருகங்களை ஆட்டிப்படைப்பது, பபூன் சேஷ்டைகள் இவை யெல்லாம் சர்க்கஸ்களில் வழக்கமாக நாம் காண்பவைதாம். ஆனால் இந்தப் படத்தில் இவை தவிர வேறு சில புதுமையான சாகஸங்களையும் சர்க்கஸ் காட்சிகளில் புகுத்தி யிருக்கிறார் தயாரிப்பாளர். மேலை நாட்டிலும் கதையம்சம் சிறப்பாக இல்லாத படங்கள் எடுக்கிறார்கள். அதற்கு இது ஓர் உதாரணம். கப்பலோடு சர்க்கஸ் சாதனங்கள் மூழ்கி எரிவது, சகல ஏற்பாடுகளும் செய்த முழுமையான சர்க்கஸ் மறுமுறையும் தீயிலே சாம்பலாவது ஆகிய காட்சிகள் பிரமாதமாக எடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் அந்தச் சர்க்கஸ் கம்பெனிக்கு ஒரே மாதிரியான விபத்து இரண்டு தடவைகளில் ஏற்படுவது அலுப்பைத் தருகிறது. ‘ரீட்டாஹேவொர்த்’ இந்தப் படத்திலே வருகிறார். ‘‘ஒரு காலத்தில் திரை உலக ரசிகர்களைக் கிறங்க வைத்த அதே ரீட்டாவா இவர்?’’ என்று வியக்கிறோம்.



## தெய்வச் செயல்

தேவரின் படங்கள் என்றால் அதில் காட்டு மிருகங்களுக்கு இடமுண்டு என்று எல்லாருக்கும் தெரியும். கதையைப் பற்றிக் கவலைப்படாதவர் அவர். நகரத்துக்கு வந்து டேராப் போட்ட ஜெமினி சர்க்கஸ் அவருக்குக் கைகொடுத்திருக்கிறது. உறவினர்களால் வஞ்சிக்கப்பட்ட ஒருவன் தான் வளர்த்த மிருகங்களால் மறு வாழ்வு பெறுகிறான். ஐந்து இலட்சங்களைக் கடனாகப் பெற்று அதிசய மிருகங்களை வாங்கிப் போட்டு அன்பு உலகத்தைச் சிருஷ்டிக்குமளவுக்கு ஊரில் செல்வாக்கு பெற்ற ஒருவர் தெருவில் யானைகளை ஆட்டிவைத்து, விரித்த துண்டிலே விழுந்த காசுகளைப் பொறுக்க வேண்டுமா என்ன? நான்கு யானைகளைக் கட்டித் தீனி போடுமளவுக்கு நடுத் தெருவுக்கு வந்துவிட்ட ஒருவரால் வித்தை காட்டிச் சம்பாதிக்க முடிகிறதென்றால் குரங்காட்டியும் வில்லனாக வருவதில் வியப்பொன்றுமில்லை! கதாநாயகன் வாழ்வது சென்னையில்தான் என்பதை வெளிப்புறக் காட்சிகள் வெளியூர் ஆசாமிகளுக்கும் புரிய வைத்து விடுமே. ஆனால் நாட்டாண்மைக்காரர் குரங்காட்டியின் குயுக்தியின்படி ‘மேஜரை’ ஊரைவிட்டே விரட்டி அடிக்க வருவது.... நம் மூளையைக் குழப்பத்தான் செய்கிறது.

மனிதர்களைவிட மிருகங்கள் சிறப்பாக நடிக்க முடியும் என்பதை நிரூபித்துக் காட்டியிருக்கிறார் தேவர். ஜெமினி சர்க்கஸ் யானைகள் உண்மையில் ஒப்பற்ற நடிகர்கள்தான்.

ஆமாம், இந்தக் காட்டு மிருகங்களின் படத்துக்குப் பாட்டு தேவைதானா?



# மாடி வீட்டு மாப்பிள்ளை

பார்ப்பவர்களை விழுந்து விழுந்து சிரிக்க வைக்கும் படம். நாகேஷும், வி. கே. ராமசாமியும் வருகிற கட்டங்களிலெல்லாம் தியேட்டர் அதிர்ந்து போகிறது. கஞ்சப் பிரபுவாக வரும் வி. கே. ராமசாமிக்கு ஏற்ற மாப்பிள்ளை நாகேஷ்தான். அவருடன் நடித்திருக்கும் ராமப்பிரபா பூவோடு சேர்ந்திருக்கும் நார்! சமாளித்துக் கொள்கிறார். நாகேஷின் நடிப்பு மிகவும் நன்றாயிருக்கிறது.

பரம ஏழையான சோமு, கல்லூரி மாறுவேடப் போட்டியில் பணக்கார மாணவி மீனுவை வென்று விடுகிறான்; அத்துடன் அவள் உள்ளத்தையும் கவர்ந்து மாடிவீட்டு மாப்பிள்ளையாகிவிடுகிறான். மாடி வீட்டுச் சதிகாரர்களின் சதித் திட்டங்களின் காரணமாக அவன் காதலி மீனு அவனைச் சந்தேகித்து வெறுக்கிறாள். கடைசியில், மாடி வீட்டு மாப்பிள்ளைக்குத்தான் வெற்றி. சதிகாரர்கள் சரிகின்றனர்; சத்தியம் வெல்கின்றது.

ரவிசந்திரனுக்கும், ஜயலலிதாவுக்கும் காதலிக்கவும், களியாட்டம் போடவும் நிறையச் சந்தர்ப்பங்கள் கிடைக்கின்றன. கணவன்மீது வீண் சந்தேகம் கொண்டு அவதிப்பட்டுக் கண் கலங்கும்போது ஜயலலிதா நன்றாய் நடிக்கிறார்.

சண்டைக் காட்சிகளில் ஜமாய்க்கும் ரவிசந்திரன் மாறுவேடத்தில் நன்றாய் நடிக்கிறார்.

டி. எஸ். முத்தையாவும், பாலாஜியும் கதாநாயகனுக்கு எதிராகச் சதித் திட்டங்கள் தீட்டியே அபாரமாக நடித்துப் பாராட்டைப் பெற்று விடுகின்றனர். அப்பாவாக வரும் சுந்தரராஜனின் நடிப்புக்குக் கேட்பானேன்!

தெலுங்கிலும், ஹிந்தியிலும் ஏற்கனவே வந்த படம்தான் தமிழில், ''மாடிவீட்டு மாப்பிள்ளை.''

படத்திலுள்ள எத்தனையோ பல குறைகள் சிரிப்பு வேகத்தில் மறைந்து போகின்றன.








## அவனுக்கு போர்ஹான்ஸ் கொண்டு பற்களைத் தக்கபடி பாதுகாக்கும் முறையைக் கற்பிக்க வேண்டிய காலம்

உங்கள் குழந்தை தூரத்து இடங்களைப் பற்றி அறிய ஆவலாயிருக்கும் போது உங்களை நாடுகிறான். உங்களிடமிருந்து அவன் கற்கும் முக்கியமான விஷயங்கள் பல. அவற்றில் ஒன்று போர்ஹான்ஸ் பற்பசையினால் பற்களைத் தக்கபடி பராமரித்தல். போர்ஹான்ஸ் ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும், தடுக்க உதவுகிறது.



பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட போர்ஹான்ஸ் ஈறுகளைப் பாதுகாக்கும் விசேஷப் பொருள் கொண்டது. அது உங்களுக்கு மட்டுமின்றி உங்கள் குழந்தைக்கும் நல்லது. எனவே இன்றும், என்றும் பற்கோளாறுகளைத் தடுப்பது எப்படியென்று அவனுக்குக் கற்றுக் கொடுங்கள். அவனை இரவிலும், காலையிலும் போர்ஹான்ஸ் உபயோகிக்கச் செய்யுங்கள். இப்பொழுதே அவனுக்கு ஆயுட்கால முழுதும் பற்களைப் பாதுகாக்கும் முறையைக் கற்றுக் கொடுங்கள்.

**போர்ஹான்ஸினால்**
**பற்களைப் பாதுகாக்கும் முறையைக் கற்பிக்க இதுவே சிறந்த சமயம்**




இலவசம்! "பற்களையும், ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற விவரமான வண்ணப் புத்தகம் 10 மொழிகளில்* கிடைக்கிறது. தபால் செலவுக்கு 10 பைசா தபால் தலைகளை அனுப்பவும்: மானேர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய்-1.

பெயர் ....................................................

முகவரி ....................................................

*வேண்டிய மொழியைக் கோடிட்டுக் காட்டுக: தமிழ், ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, வங்காளம், தெலுங்கு, மலையாளம் அல்லது கன்னடம்.

உங்கள் குழந்தை படிக்க வேண்டிய முக்கியமான புத்தகங்களுள் இதுவும் ஒன்று.

K 6

**போர்ஹான்ஸ்** பற்பசை—பல்வைத்தியர் ஒருவரால் உருவாக்கப் பெற்றது

CMGM-188 TM

அன்று இரவு படுத்திருக்கும்போது தாத்தாவுக்கு ரங்கமணி எழுதியிருந்த கடிதத்தைப் பல முறை படித்து ரசித்துக் கொண்டிருந்தாள் திரிவேணி.

''குறும்புக்காரியா நான்....? பிடிவாதக்காரியாமே! இவர் எல்லாம் கண்டவர் மாதிரிதான்....வரட்டும் சொல்லுகிறேன்'' என்று முணுமுணுத்தாள். பிறகு கடிதத்தை மடித்து மேஜைக்குள் வைத்தாள். மேஜையின் மீதிருந்த ரங்கமணியின் படம், அவளையே பார்த்துச் சிரிப்பது போலிருந்தது. எழுந்து மேஜைமீது சாய்ந்து நின்று கொண்டு அந்தப் படத்தையே உற்றுப் பார்த்தாள். அதுவும் அவளை உற்றுப் பார்த்

அந்தப் போட்டோவை எடுக்கத் தான் பட்ட பாட்டை நினைத்துச் சிரித்தாள். ரங்கமணியைப் படம் பிடிப்பதற்காக ஒரு நாள் கேமராவுடன் அவனுடைய அறைக்குள் நுழைந்தாள்.

''சேச்சே, எனக்கு போட்டோவுக்கு உட்காருவது என்றாலே பிடிக்காது'' என்றான் ரங்கமணி.

''நீங்கள் இதுக்கென்று அலங்காரம் செய்து கொண்டு உட்காரவேண்டாம். நீங்கள் பாட்டுக்கு இருங்கள். நான் எடுத்துக்கொள்கிறேன்'' என்றாள் திரிவேணி.

''ஊஹூம்... அது முடியாது. படம் எடுத்துக் கொள்ளவே எனக்குப் பிடிக்



# கல்லுக்குள் ஈரம்

ர.சு. நல்லபெருமாள்

## அத்தியாயம் 27

## இதயத் திருட்டு

தது. திரிவேணிக்கு வெட்கம் வந்து விட்டது. படத்தைச் சுவர்ப் பக்கமாகத் திருப்பினாள். பிறகு மீண்டும் படத்தைத் தன் பக்கமாகத் திருப்பி வைத்தாள். பிறகு படுக்கையில் வந்து படுத்துக்கொண்டே மேஜைமீதிருந்து அவளை நோக்கியபடி இருந்த ரங்கமணியின் உருவத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

காது. இப்போது படம் பிடித்து என்ன செய்யப் போகிறாய்?''

''சும்மாதான்.''

''சும்மாவும் வேண்டாம், சுமந்துகொண்டும் வேண்டாம்.''

''நீங்கள் அடிக்கடி வெளியூர் போய்விடுகிறீர்கள். உங்கள் படம் இங்கிருக்கட்டுமே!''

''ஏனோ?... மறந்துவிடுவாயோ? அவ்வளவு தூரம் படத்தைப் பார்த்துத்தான் என்னை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டுமானால், அது தேவையில்லையே'' என்றான் ரங்கமணி சிரித்துக் கொண்டே.

''ஐயோ, அதற்காக இல்லை. உங்களை நான் படம் பிடிக்க வேண்டும். முதலில் எனக்குப் படம் எடுக்கத் தெரிகிறதா என்றுவது பார்ப்போமே.''

''நீ படம் எடுத்துப் பழக நான்தான் அகப்பட்டேனா?''

''சரி, இப்போது சம்மதிக்கிறீர்களா இல்லையா?'' என்று பொய்க் கோபத்துடன் கேட்டாள்.

''கட்டாயம் எடுத்துத்தான் ஆகவேண்டுமானால், எடு'' என்று சொல்லி நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான். அவள் படம் எடுக்கப் போகும் சமயத்தில் முகத்தைக் கோணி, மாறு கண் மாதிரி விழித்தான்.

''ஐயய்ய, என்ன இது? இப்படிக் கோணிக் கொண்டிருந்தால்?''

''அதைப் பற்றி உனக்கென்ன? உனக்குப் படம் எடுக்க வேண்டும், எடுத்துக் கொள். நான் என் இஷ்டப்படிதான் உட்கார்ந்திருப்பேன்'' என்றான். திரிவேணியின் ஆவல் அந்தச் சமயத்தில் நிறைவேறவில்லை. ஏமாற்றத்துடன் திரும்பினாள். அன்று சாயங்காலம் ரங்கமணி நாற்காலியில் உட்கார்ந்து ஏதோ படித்துக் கொண்டிருந்தான். புத்தகத்தில் ஆழ்ந்து விட்டதால் திரிவேணி வந்ததையே கவனிக்கவில்லை. திரிவேணி அடிமேல் அடிவைத்துச் சத்தம் செய்யாமல் அறைக்குள் நுழைந்து, கேமராவைப் படம் எடுக்க லாயக்காக வைத்துக் கொண்டு நின்றாள். பிறகு மெதுவாக இருமினாள். ரங்கமணி படிப்பதை விட்டுப் பக்கத்தில் திரும்பி, திரிவேணியைப் பார்த்தான். மறுகணம், மின் ஒளி மாதிரி கேமராவிளக்கு மின்னி ஓய்ந்தது. படமும் எடுத்தாயிற்று. திரிவேணி கலகலவென்று சிரித்தாள். ரங்கமணி திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தான்.

''இப்போது என்ன செய்வீர்களாம்? படம் எடுத்து விட்டேனே!'' என்று கூறிச் சிரித்தாள்.

''இது என்ன திருட்டுத்தனம்?'' என்றான் ரங்கமணி.



''இருட்டுத்தனமா? பளிச்சென்று விளக்கு போட்டல்லவா படம் எடுத்திருக்கிறேன். இருட்டிலா எடுத்தேன்; இருட்டுத்தனம் என்பதற்கு?''

''இருட்டில் திருடினால்தானா திருட்டு? பகலிலும் திருடலாமே.''

''அது உண்மைதான். திருடுவதற்கு நேரம் காலம் ஏது?'' என்றாள் திரிவேணி. பிறகு அவனை உற்றுப் பார்த்தாள். தன்னுடைய இதயத்தை அவன் திருடி எங்கே ஒளித்து வைத்திருக்கிறான் என்று அவன் கண்களில் தேடினாளோ, என்னவோ! பிறகு வேறு எதையோ நினைத்துக் கொண்டு சிரித்தாள்.

''என்ன சிரிக்கிறாய்?'' என்று ரங்கமணி கேட்டான்.

''ஒன்றுமில்லை. திருட்டு என்றதும் ஒரு பழைய கவிதை ஞாபகத்துக்கு வந்தது'' என்றாள் திரிவேணி.

''என்ன அது?''

''குற்றவாளிக்குத் தண்டனை அளிக்கும் ஒருவனிடம் ஒருத்தி, ஒரு குற்றத்தைக் கூறி நீதி கேட்கிறாள்.''

''என்னவென்று?''

''எந்த விதமான திருட்டுக்கும் தண்டனை உண்டா என்று கேட்கிறாள். அதற்கு அவன் சொல்லுகிறான், 'திருடு கொடுத்தவன் இரக்கப்பட்டால், திருடியவன், திருட்டுப் பொருளைத் திரும்பக் கொடுத்து விட்டு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளலாம்' என்று.''

''பிறகு?''

''பிறகு, அவள் சொல்லுகிறாள், என்னுடைய இதயத்தை ஒருவன் திருடிவிட்டான், தண்டனை அளிக்க வேண்டும் என்று. 'குற்றவாளி எங்கே' என்று அவன் கேட்கிறான். அவள், அவனையே சுட்டிக் காட்டுகிறாள்....''

''அப்புறம்...? அப்புறம்...?'' — ஆவலோடு கேட்கிறான், ரங்கமணி.

''அப்புறம் என்ன.... திருடிய பொருளைத் திருப்பித் தந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன்' என்று அவன் சொன்னான்.''

''பேஷ், அது நல்ல வழிதான்'' என்றான் ரங்கமணி.

''ஆனால், அவள் திருடனிடம் இரக்கம் காட்டத் தயாரில்லையே...'' என்று கூறி விட்டுக் கதையைப் பாதியிலேயே நிறுத்தி விட்டு, கேமராவையும் எடுத்துக் கொண்டு ஓடினாள் திரிவேணி.

''திரிவேணி, கதையின் முடிவென்ன?''

''அது அப்புறம்....'' என்று கூறிக் கொண்டே ஓடி மறைந்து விட்டாள்.

பழைய சம்பவங்கள் நினைவில் படர்ந்த போது, திரிவேணிக்கு உடம்பெல்லாம் ஒருவித இனிமை படர்ந்து சிலிர்ப்பது போலிருந்தது. கதையின் முடிவைக் கூறுமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டே ரங்கமணி அவள் பின்னே ஓடிவந்த காட்சி இன்னும் அவள் கண் முன்னே பசுமையாகவே இருந்தது.

இருட்டுத்தனமாக ரங்கமணி அசிரத்தையாயிருந்த சமயத்தில் எடுத்துவிட்ட படம் மிகவும் பிரமாதமாக அமைந்து விட்டது.



அவ்வளவு அழகாக அமையும் என்று திரிவேணி கூட எதிர்பார்க்க வில்லை.

படத்தை அவனிடம் காட்டத் திரிவேணி வந்தபோது ரங்கமணி கேட்டது நினைவுக்கு வந்தது:

''கதையைப் பாதியில் விட்டுவிட்டாயே. முடிவு என்ன?'' என்று அடங்காத ஆர்வத்தோடு கேட்டான், ரங்கமணி.

''இது முடிவில்லாக் கதை.''

''அப்படியென்றால்?''

''கவிதை அதோடு முடிந்து விடுகிறது. அவ்வளவுதான்! மீதியை நீங்களே சிந்தித்துக் கொள்ள வேண்டியதுதான்'' என்று கூறி விட்டுப் படத்தை அவனிடம் கொடுத்தாள்.

''படம் பிரமாதமாக விழுந்துவிட்டதே. ஆமாம், படத்தை என்ன செய்யப் போகிறாய்? நான்தான் உன்னுடைய காந்தியப் பாதைக்கு வரவில்லை; இந்தப் படத்தை யாவது அஹிம்சைப் பாதையில் செலுத்தி விடலாம் என்று பார்க்கிறாயா?'' என்றான்.

''இந்தப் படம் எந்தப் பாதைக்கும் போகாது. அது ஒரு வேலையும் இன்றி என் மேஜை மீது இருக்கும்'' என்றாள்.

''இவ்வளவுதானா...? சோம்பேறியாக, மேஜை மீது கொலு இருக்கத்தானா இந்தப் படம்?'' என்று கூறிச் சிரித்தான் ரங்கமணி.

உண்மைதான்! அது அவள் மேஜை மீது கொலு இருக்கிறது. அவனோ, அவள் இதயத்தில் கொலு இருக்கிறான். அவனை நேரில் காண முடியாதபோது, அவனோடு அந்தப் படம்தானே பேசுகிறது, சிரிக்கிறது.

திரிவேணி படுக்கையில் படுத்திருந்தவாறு அந்தப் படத்தையே பார்த்து ரசித்துக் கொண்டிருந்தாள். ரசனை, பெருமூச்சுக்களாகக் கடையில் முடிவடைந்தது.

ஒரு வாரத்துக்குப் பிறகு ரங்கமணியின் தாத்தா ஊருக்குப் புறப்பட்டார். மொத்தத்தில் அவருக்கு ஒரு திருப்தி. ரங்கமணியைக் கண்ணும் கருத்துமாக அந்தை கவனித்துக் கொள்வாள் என்ற நம்பிக்கையில் அவர் மனப் பாரம் சிறிது இறங்கியது.

அந்தக் குறும்புக்காரப் பெண்ணின் நினைவும் கிழவரின் நெஞ்சுக்குச் சாந்தியைக் கொடுத்தது.

''கெட்டிக்காரப் பெண். நம்ம பயலுக்கு ஏற்றவள்தான். அவனுடைய படபடப்புக்கும் இவளுடைய குறுகுறுப்புக்கும் நல்ல பொருத்தம். அவனுடைய கொட்டத்தை யெல்லாம் இந்தப் பெண் அடக்கி விடுவாள்'' என்று தமக்குள்ளேயே நினைத்துச் சிரித்துக் கொண்டார்.

திரிவேணியின் மேஜை மீது ரங்கமணியின் படத்தைக் கண்டபோது கிழவருக்குப் பரம திருப்தி.

''இனி கவலை இல்லை. பயலைக் கண்ணுக்குள்ளேயே வைத்து இந்தப் பெண் கவனித்துக் கொள்வாள்'' என்று முணகிக் கொண்டார்.

''ஏம்மா, இந்தப் படம் எனக்கொன்று கொடேன். அவன் படமே வீட்டில் இல்லை. படம் எடுக்கவே சம்மதிக்க மாட்டான். என்னவோ நீ சொல்லித்தான் இந்தப் படத்தை எடுக்கச் சம்மதித்திருக்கிறான்போல் இருக்கிறது'' என்றார்.

''தாத்தா! இதை நானே எடுத்தேன்'' என்றாள் திரிவேணி பெருமையுடன். அந்தப் படத்தில் வேறொரு பிரதி எடுத்துக் கிழவருக்குக் கொடுத்தாள். படத்தில் தம் பேரன் அவ்வளவு அழகாக இருந்ததில் கிழவருக்குக் கொள்ளை ஆனந்தம். பேரனுக்குத் திருஷ்டி பட்டுவிடும் என்று கூட நினைத்துக் கொண்டார்.

அவர் ஊருக்கு வண்டி ஏறியபோது, சொக்கலிங்கம் பிள்ளையும் கூட இருந்து வழியனுப்பினார்.

''விடுதலை, சுதந்திரம் என்று சுற்றுகிறவன். அந்த அலைச்சலில் சாப்பிடக் கூட மறந்து விடுவான். சிறு குழந்தை மாதிரிதான். அவனை நீங்கள்தான் பார்த்துக் கொள்ள வேண்டும். அவன் வந்ததும் ஊருக்கு ஒரு முறை வரச் சொல்லுங்கள்'' என்று சர்தாரிடம் கூறிவிட்டுச் சென்றார் கிழவர்.

ரங்கமணி மீது கிழவர் கொண்டிருக்கும் பாசத் தவிப்பைக் கண்ட அத்தையின் கண்களில் நீர் முட்டி நின்றது.

ஃ ஃ ஃ

கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் வண்டி புது தில்லியை நெருங்கிக் கொண்டிருந்தது. ரங்கமணி பிரயாணக் களைப்பினால் சோர்வடைந்திருக்கும் தன் தோற்றத்தைப் புதுக்கிக் கொள்வதற்காகத் தன் பெட்டியைத் திறந்தான். பெட்டியின் மேலாக அழகான பேண்டும், கோட்டும், டையும் வைக்கப்பட்டிருந்தன. அதைக் கண்ட மில்லர் ''மிஸ்டர், ரங்கமணி! அந்த மேல்நாட்டு உடைகளில் நீங்கள் இன்னும் எடுப்பாகத் தோன்றுவீர்கள்...உண்மையிலேயே நீங்கள் அழகுள்ளவர்தான்'' என்றார்.

ரங்கமணிக்கு வெட்கம் வந்துவிட்டது.

''அப்படியெல்லாம் இல்லை சார்!'' என்றான் அடக்கத்துடன்.

''இல்லை, மிஸ்டர் ரங்கமணி, உங்கள் அழகு உங்களுக்குத் தெரியவில்லை. எத்தனையோ பெண்களின் பெருமூச்சுக்கு நீங்கள் காரணமாயிருப்பீர்கள். பெண் அழகாயிருப்பதை விட ஆண் அழகா யிருப்பதில்தான் சங்கடங்களும், ஆபத்துக்களும் அதிகம்'' என்றார் மில்லர்.

''என்ன சார், நீங்கள் மாற்றிச் சொல்கிறீர்களே. பெண்கள் அழகாயிருப்பது தான் ஆபத்து என்பார்கள்'' என்று இடைமறித்துக் கூறினான் ரங்கமணி.

''இல்லை. ஆண் அழகாயிருப்பதில்தான் ஆபத்து அதிகம். சமூக சட்டதிட்டங்களுக்குப் பயந்து பெண்கள், தங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு வாழ வேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது. ஆனால் ஆண்களுக்குச் சமூகத்தில் சுதந்திரம் இருக்கிறதே.''

''எல்லாம் மனத்தைப் பொறுத்தது தான். இதைக் கட்டுப்படுத்திக் கொண்டால் என்ன சங்கடம்?''

''மனத்தை அவ்வளவு இலகுவில் கட்டுப்படுத்திவிட முடியுமா? இந்த மனம், அடங்காத குதிரை மாதிரி சண்டித்தனம் செய்து,

# நங்கை யிவள் மீது
# வீசும் நறுமணம்
# உங்கள் மீதும்
# நேசமுடன்
# நெடுநேரம்
# வீசாததை
# நினைக்கக்
# கூசாதோ
# நெஞ்சம்!




வான் மணம்· மணக்கும்
இக் கணம், சற்றுநேரம் ஆன
பின்னும், இருக்கும்· மணிக்கணக்
கான பின்னும் மணக்கும்· இதுதான்
லக்மே டால்கம் பவுடர். மேனியோடு
இணங்கியிருக்கும் மென்மையாக. உங்களை
அடைகிறது நான்கு நறுமணங்களுடன்.
லேவெண்டர் . வெட்டிவேர் . நிர்வாண்
. சந்தனம்.

## லக்மே டால்கம்

ASP/LT-8/67 TM

# உடனடி நிவாரணம்!

## அஜீரணத்திலிருந்து நீங்களும் உங்கள் குடும்பத்ினரும் விடுதலை பெற







இனிமையான சுவையுள்ள பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னிஷியா சில விநாடிகளில் "உடனடி" நிவாரணமளிக்கிறது. ஏனெனில் அவை பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னிஷியாவினுடைய பூரண சாரத்தையும் கொண்டது. ஒவ்வொரு மாத்திரையும் தன்னுடைய எடைக்கு 189 மடங்கு எடையுள்ள வயிற்றுப் புளிப்பை அகற்றுகிறது.

இப்பொழுது மெல்லிய தகடுகளில் 10 மாத்திரைகளாகவும் 4 மாத்திரைகளாகவும் கிடைக்கிறது. குடும்பத் தேவைகளுக்கு சிக்கனமான முறையில் 75 மற்றும் 150 மாத்திரைகள் கொண்ட பாட்டில்களில் தயாராகக் கிடைக்கும்.

இன்றே வாங்குங்கள், எப்பொழுதும் பிலிப்ஸ் மாத்திரைகள் கைவசம் வைத்திருங்கள். வயிற்றில் கோளாறு ஏற்படும் போது சில மாத்திரைகளை சுவைத்து "உடனடி" நிவாரணம் பெறுங்கள்.




# பிலிப்ஸ்

## மில்க் ஆப் மெக்னீஷியா டாபிலெட்

மான்யுபாக்சரர்: ரிஜிஸ்டர்ட் யூஸர்
டேய்ஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்)
பிரைவேட் லிமிடெட்,
62, புண்டல் ரோட், கல்கத்தா-19

எங்காவது பள்ளத்தில் விழுந்து கிடக்கும்'' என்றார் மில்லர்.

புதுதில்லியில் மில்லர் பிரிந்து சென்றார். பழைய தில்லிக்குப் போவதாக ரங்கமணி கூறிவிட்டான்.

''நல்லது, நாம் பிறகு சந்திக்கலாம்'' என்று விடைபெற்றுக் கொண்டு மில்லர் சென்று விட்டார்.

தில்லி ரயில்வே ஸ்டேஷனில் வண்டி நின்றதும் ரங்கமணி பரபரப்புடன் இறங்கிச் சுற்றுமுற்றும் பார்த்தான். பிளாட்பாரத்தில் கூட்டம் மொய்த்துக் கொண்டிருந்தது. ரங்கமணி சிறிது நேரம் கூட்டத்துக்குள் நின்றவாறு அங்கும் இங்குமாக ஓடிக் கொண்டிருந்தவர்களைக் கவனித்தான். பிறகு பிரயாணிகள் தங்கும் அறையின் வாசலில் கிடந்த பெஞ்சில் உட்கார வேண்டும் என்றுதான் திட்டம். திட்டப்படி ஒரு ரோஸ் நிறக் கைக்குட்டையைக் கையில் வைத்துக்கொண்டான். சிறிது நேரத்தில் பஞ்சாபி உடையணிந்த ஓர் இளம் பெண் அவன் பக்கத்தில் வந்து நின்று அவனையே உற்றுப் பார்த்தாள். பிறகு, ''சர்தார் சுகமா?'' என்று ஹிந்தியில் கேட்டாள். ரங்கமணி திகைப்புடன் அவளையே உற்றுப் பார்த்தான். அவள் எவ்வித உணர்ச்சியையும் முகத்தில் காட்டாமல் அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

''தாம்பிரபரணிக் கரையில் அவர் சுகந்தான்'' என்று பதில் சொல்லிவிட்டு அந்தப் பெண்ணைக் கூர்ந்து பார்த்தான். அவளுக்கு இருபது வயது இருக்கும். நல்ல அழகு. கட்டு உடல். பஞ்சாபி உடை, அவளது இளமையை எடுப்பாகக் காண்பித்துக் கொண்டிருந்தது. ரங்கமணி சொன்ன பதிலைக் கேட்டதும் அந்தப் பெண்ணின் முகம் மலர்ந்தது. உதட்டில் புன்முறுவல் தோன்றியது. தன்னுடைய கைப்பையிலிருந்து இரண்டு துண்டுத் தாள்களை எடுத்துக் கொடுத்து விட்டு விரைவாக அந்த இடத்தை விட்டு அகன்று கூட்டத்தில் மறைந்து விட்டாள். ரங்கமணி பிரமிப்புடன் அவள் கொடுத்த இரண்டு தாள்களையும் கையில் வைத்துக் கொண்டு சிறிது நேரம் உட்கார்ந்திருந்தான். பிறகு அந்தத் தாளை ஒவ்வொன்றாகப் பார்த்தான்.

ஒரு தாளில், அவன் தங்க வேண்டிய ஹோட்டல் பெயரும், விலாசமும் இருந்தன. அவனுக்காகப் பதிவு செய்யப்பட்டிருந்த அறையின் எண்ணும் அதில் குறிக்கப்பட்டிருந்தது. மற்றொரு தாளில் 'ஜும்மா மசூதி, மாலை 6 மணி' என்று எழுதியிருந்தது.

ரங்கமணிக்குத் திகைப்பாயிருந்தது.

வண்டியை விட்டு இறங்கியதும் தன்னை ஒரு பெண் வரவேற்பாள் என்று அவன் எதிர்பார்க்கவேயில்லை.

ஸ்டேஷனில் அவனைச் சந்திக்க வரும் நபர் எந்த மாதிரி கேள்வி கேட்பார், இவன் எந்த மாதிரி பதில் சொல்ல வேண்டும் என்பதை மட்டுந்தான் சென்னையிலிருந்த போது மேகராஜன் சொல்லியிருந்தானே தவிர, இப்படி ஒரு பெண் வரவேற்பாள் என்று அவன் சொல்லவில்லை.




மந்திரிகள் உலகம் 4





"பரீட்சையில் பாஸாகி விட்டான் என்பதைப் பையனிடம் சொல்லாதீர்கள்! அவனுக்கு ஹார்ட் பெயிலாகி விடும்!"

கையிலிருந்த தாளைத் திரும்பத் திரும்பப் படித்து மனத்தில் பதிய வைத்துக் கொண்டு தாளைத் துண்டு துண்டாகக் கிழித்துக் கோட்டுப் பைக்குள் திணித்துக் கொண்டு ஹோட்டலுக்குப் புறப்பட்டான்.

கிராண்ட் ஹோட்டலுக்குச் சென்று விசாரித்தபோது ஏழாம் நம்பர் அறை அவனுக்காகப் பதிவு செய்யப்பட்டிருந்ததை அறிந்தான். பிரும்மாண்டமான அந்த ஹோட்டலையும், அங்கே தோன்றிய பரபரப்பையும், படாடோபங்களையும் கண்டு முதலில் மலைத்தான். இப்படிப் பரக்கப் பரக்க விழித்துக் கொண்டிருந்தால் தன் மீது யாருக்காவது சந்தேகம் தோன்றிவிடும் என்பதை உணர்ந்து கொண்டு மிடுக்குடன் படியேறி, மாடியில் அவனுக்கு ஒதுக்கப்பட்டிருந்த அறையை அடைந்தான்.

உயர்தரமான ஐரோப்பியப் பாணியில் அமைந்த நாகரிகமான ஹோட்டலும், அதிலுள்ள வசதிகளும் அவனுக்குப் பிடித்திருந்தாலும் உள்ளூற ஒருவித பயம் அழுத்திக் கொண்டேயிருந்தது. பின்னே என்ன, நவநாகரிகமான ஹோட்டலில் தங்கிக் கொண்டு பட்டிக்காட்டான் மாதிரியா அசட்டு விழி விழிப்பது? செல்வந்தன் மாதிரி நடிப்பதில் அவனுக்குச் சங்கடமில்லை. ஆனால் அது வேடிக்கையாக இருந்தது. வேலையாட்களின் அர்த்தமற்ற குழைவும், அங்கு தங்கியிருந்த செல்வந்தர்களின் டம்பாச்சாரித்தனமும், மிருதியான பகட்டும் ரங்கமணிக்கு வேடிக்கையாக இருந்தன. அர்த்தமற்ற அறிமுகங்களும் உதட்டில் மட்டுமே தாண்டவமாடும் நாசூக்கான சிரிப்பும், செயற்கையாகத்தான் இருந்தனவே தவிர, ஒன்றாவது இயல்பான செயலாயில்லை. அந்த நவநாகரிக ஹோட்டலுக்குப் படாடோபத்துடன் வந்து போய்க் கொண்டிருந்த பெண்களைக் கண்டு ரங்கமணி மனம் குழம்பினான்.

அப்பெண்களின் உடை அலங்காரமும் அவர்கள் நடந்து கொண்ட விதமும் அவனுக்கு அவர்களிடம் மதிப்பு ஏற்படும் வகையில் அமைந்திருக்கவில்லை.

சே.... நாகரிகம் என்பது இதுதானா? அகம்பாவமும், போலியும், வெட்கமின்மையும் நிறைந்திருந்த அந்த நாகரிகச் சூழ்நிலை அவனை அமுக்கித் திணற வைத்தது.

அன்று மாலை வரை அவன் அறையை விட்டு வெளியே வரவேயில்லை. அறைக்குள் படுத்தபடியே எதையெல்லாமோ எண்ணிப் பொழுதைக் கழித்தான். சர்தார் சொக்கலிங்கத்தைப் பற்றி நினைத்து வியந்துகொண்டான். ஏற்கனவே அவர் மீது ரங்கமணிக்கு மரியாதையும் அன்பும் இருந்தது. இப்போது அவரைப் பற்றிய இரகசியத்தை நிஷிதர் மூலமாக அறிந்ததும் அவனுடைய எண்ணத்தில் சர்தார் சொக்கலிங்கம்பிள்ளை மிக மிக உயர்ந்து விட்டார். அவருடைய கடந்த கால வாழ்வையும், நிகழ்காலத்தில் அவர் ஏற்றிருக்கும் பொறுப்பையும் எண்ணி எண்ணி வியந்தான். அவர் மீது அவனுக்குப் பயம் கலந்த பக்தியே ஏற்பட்டு விட்டது.

மாலை வரை இந்த மாதிரி நினைவுகளில் பொழுதைக் கழித்துவிட்டு, மாலை ஐந்து மணிக்கு வெள்ளைச் சட்டையும் சூட்டும் அணிந்து கொண்டு ஹோட்டலை விட்டு வெளிக் கிளம்பி ஜும்மா மசூதிப் பக்கம் வந்தான். சிறிது நேரம் பிரும்மாண்டமான அந்த மசூதியின் படிகளில் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். அடிக்கடி கைக் கடிகாரத்தையும் பார்த்துக் கொண்டான். மணி ஆறாகிவிட்டது. சுற்றுமுற்றும் கூர்ந்து பார்த்தான். சிறிது தூரத்தில் முஸ்லிம்பெண் ஒருத்தி முக்காடிட்டு முகத்தை மூடிக் கொண்டு அவனை நோக்கி வருவது தெரிந்தது. அவன் பக்கத்தில் அவள் வந்ததும் முக்காட்டைச் சிறிது விலக்கி முகத்தைக் காண்பித்தாள்.

அவளேதான்! டில்லி ஜங்ஷன் பிளாட்பாரத்தில் அவனிடம் துண்டுத் தாள்களைக் கொடுத்தாளே, அவளேதான்! எவ்வளவு வித்தியாசம்! பஞ்சாபி உடையிலிருந்த கவர்ச்சி இப்போது இல்லை. தன்னைத் தொடர்ந்து வரும்படி கண்ணாலேயே ரங்கமணிக்குச் சைகை செய்துவிட்டு அவனைக் கடந்து சென்றாள். அவளைப் பின்தொடர்ந்தான் ரங்கமணி.

ஜும்மா மசூதிக்குப் பின்னாலுள்ள சௌரி பஜாருக்குள் சென்றாள். சௌரி பஜாரில் கூட்டம், சந்தை மாதிரி கூடிக் கிடந்தது. பல கட்டடங்களைக் கடந்து ஒரு சந்துக்குள் நுழைந்து ஒரு மாடியில் ஏறினாள். ரங்கமணி தொடர்ந்தான். அவர்களை யாருமே கவனித்து அக்கறை காட்டவில்லை. அவரவர்கள் தங்களுடைய வேலைகளிலேயே மும்முரமாயிருந்தனர். மாடி அறையின் வாசலில் நின்றாள். இடுப்பில் செருகி இருந்த திறவுகோலை எடுத்து அறைக் கதவில் தொங்கிக் கொண்டிருந்த பூட்டைத் திறந்து கதவைப் பாதி திறந்து வைத்தாள். பிறகு திரும்பி, ரங்கமணியை உள்ளே போகும்படி சைகை செய்தாள். (தொடரும்)



# வெண்ணிலவுப் பெண்ணரசி

சோமு

## அத்தியாயம் 14

## இரண்டு உள்ளங்கள்

"இந்த அரசமரக்கலத்தைக் கண்டா இவ்வளவு பதறுவது?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான் வேலவன்கோதை.

"இது நம்முடைய அரசரும் அரசத் தலைவர்களும் வருகிற மரக்கலம்! நம்மை யெல்லாம் மனக் களிப்போடு வெள்ளைத் தீவுக்கு அழைத்துச் செல்ல வருகிறது இது. மரக்கலத்தில் எப்போதுமே திகைப்பும் துயரமும் தருகிற நிகழ்ச்சிகளையே துய்த்துத் துய்த்து இப்போது மரக்கலம் என்றாலே உங்கள் இருவருக்கும் அச்சந்தான் உண்டாகிறது! அப்படித்தானே நீலவல்லி?" என்று மேலும் கேட்டான் வேலவன், மேலும் சிரித்துக்கொண்டே.



மூவரும் மரக்கலம் வந்து நிற்பதை நிலா முற்றத்திலிருந்து பார்த்தார்கள். சற்று நேரத்தில் செல்வந்தி அடிகள் வெளி வந்தார். வந்து நேரே வேனில் மாடத்துக்குள்ளேயே நுழைந்தார்.

"வெள்ளைத் தீவின் எதிர்காலத் தலைவனை வரவேற்று அழைத்துப் போவதற்காக, பட்டத்தரசியோடு சேர்த்து ஒன்றாக அழைத்துப் போவதற்காக, அரசத் தலைவர்கள் வந்து நிற்கிறார்கள் மரக்கலத்திலே!... புறப்படலாமா?" என்றார் அடிகள்.

நீலவல்லியும் வேலவனும் அடிகளின் பொற்பாத கமலங்களிலே வணங்கி எழுந்தார்கள்.

"பிரிவு என்று ஒன்று இருந்தால்தான் இணைப்பு என்பதற்குப் பொருள் உண்டு. பிரிந்தீர்கள். இப்போது

இணைந்தீர்கள். இனி என்றென்றும் பிரியா இணக்கம் கொண்டு நீங்கள் வெள்ளைத் தீவை ஆண்டு வரப் போகிறீர்கள். உங்களுடைய ஆட்சியிலே தமிழர்களின் கலைகள் எல்லாம் மறுமலர்ச்சி பெறட்டும்! உங்களுடைய பாதுகாவலிலே தமிழ் நாட்டின் பழைமையான சமயங்கள் எல்லாம் மறு வாழ்வு பெற்றுத் தங்களுக்குள் எத்தகைய பூசலும் இன்றி ஒற்றுமையாகத் தங்கள் தங்கள் அறங்களைப் பேணி வளர்க்கட்டும்! வாருங்கள். அரசச் சுற்றம், மாட்சிமை பொருந்திய அரசரோடு உங்களை எதிர்நோக்கி நிற்கிறது. நீங்கள் அந்த மரக்கலத்திலேறி நேரே வெள்ளைத் தீவு நோக்கிச் செல்லுங்கள். நான் பெருந்துருத்திக்குச் சென்று வழிபாடுகளை முடித்துக் கொண்டு, மற்றத் துறவிகளோடு வெள்ளைத் தீவுக்கு வந்து சேருவேன். வெற்றித் திருவிழாவில் இந்தத் தமிழகம் முழுதுமே கலந்து கொள்ளப் போகிறது!''

இவ்வாறு களிப்போடு கூறினார் செவ்வந்தி அடிகள்.

ஃ ஃ ஃ



பெருந்துருத்தித் தீவிலே நடக்கும் வழிபாட்டில் கலந்து கொள்வதற்காக இளநன்னி பவனத் தீவிலிருந்து பெருந்துருத்திக்கு வந்தாள் அல்லவா? இளநன்னி அங்கு வந்து சேர்ந்ததும் துறவுக் கன்னியர்கள் தங்கியிருந்த விடுதிக் கூடத்துக்கு அவளை அழைத்துச் சென்றாள் ஒரு முதிய துறவி. சென்று அவளை எல்லாருக்கும் அறிமுகம் செய்து வைத்தாள். ஆதிரை அடிகள் இளநன்னியை மிகுந்த அன்போடு தவச் சாலைக்குள் வரவேற்றாள்.

''இளவரசி! இந்தக் கன்னிப் பெண்களிலே துறவுக் கோலம் பூண்டு தவ வாழ்வு மேற்கொண்டுள்ள பெண்களைத் தவிர, மற்றவர்கள் எல்லாரும் துறவுக்கு வேண்டிய மன நிலையிலே பயிற்சி பெற்று வருகிறவர்கள்!'' என்றார் ஆதிரை அடிகள்!

''அப்படியா! துறவுக்கு முன்னேயும் அந்த மன நிலை பெறுவதற்குப் பயிற்சி தருகிறீர்களா?'' என்று கேட்டாள் இளவரசி. ஆதிரை அடிகள் சொன்னாள்:

''ஆமாம், இளவரசி! புத்த தேவனுடைய கட்டளைப்படி அமைந்த இத்தகைய தவச் சாலைகளிலே, ஆரம்பத்தில் பெண்களைத் துறவிகளாக ஏற்றுக் கொள்வது பற்றிப் பல கருத்து வேறுபாடுகள் இருந்தன. பிறகு மனித மனத்தின் இயல்பிலே பெண் மனத்துக்கும் ஒரு முக்கியமான பங்கு இருக்கிறது என்பதை உணர்ந்த புத்தர் பெருமான், சில கடுமையான விதிகளுக்கு உட்பட்டுப் பெண்களையும் துறவிகளாக ஏற்றுக் கொள்ளத் தலைப்பட்டார். இதன் காரணமாக ஆடவர்களைவிடப் பெண்களுக்குச் சட்டதிட்டங்கள் இன்னும்

கடுமையாக இருக்கின்றன. இந்தத் தவச்சாலையிலே ஒரு பெண்மணிக்குத் துறவுநிலை தருவதற்கு முன்பு, எத்தனையோ வகையில் அவளுக்குப் பயிற்சியும் சோதனையும் கொடுக்கிறோம். இங்குள்ள பலரும் இந்தப் பயிற்சிகளிலும் சோதனைகளிலும் ஒவ்வொரு படியாகக் கடந்து முன்னேறி வருகிறார்கள் !'' என்றாள் ஆதிரையம்மை!

இதுவரை அந்தக் கன்னியர்களின் குழுவிலே எங்கோ ஓர் ஓரத்தில் நின்று கொண்டிருந்த பொன்மணி, இப்போது முன்னணியிலே வந்து நின்று கொண்டு இளவரசி இள



## சென்ற ஆண்டு, குழந்தைகளைப் பள்ளியில் சேர்த்தான்...
## இந்த ஆண்டு, மகளின் திருமணத்திற்காக
## நகைநட்டுக்கள் வாங்கிவிட்டான்...
## அடுத்த ஆண்டு...எதையும் செய்வான்!

கணேசனின் மகளுக்கு ஒளிமயமான எதிர்காலம் உண்டு; காரணம் அவள் தந்தை முற்போக்கான விவசாயி. உயரிய விதைகளை விதைப்பவன், விஞ்ஞான முறைப்படி பருவத்திற்கேற்பப் பயிர்களை மாற்றி மாற்றி விளைப்பவன். நீர்ப் பாசனம் முதலிய எல்லா நன்மைகளையும் ஏற்பவன், ராலீஸ் தயாரிக்கும் சீர்நிரவிய கலவைகளைக் கொண்டு நிலத்திற்கு உரமிட்டு, டாடா பைஸன் தயாரிக்கும் பூச்சிக் கொல்லிகளால் தன் பயிர்களைப் பாதுகாப்பவன். இவ்விரு தயாரிப்புகளும் மிக எளிதில் கிடைப்பவை, ஓங்கிப் பெருகும் உயரிய விளைச்சல்களைத் தருபவை.




உரங்களும், பூச்சிக்கொல்லிகளும் நல்வளமைக்கு வழி.

Benson/440 A TM

நன்னியைக் கூர்மையாக ஆராய்ந்து பார்த்தாள். உள்ளம் விம்மியது அவளுக்கு!

''வாழ்வில் எத்தனையோ சோதனைகளைக் கடந்து வந்துள்ள இந்தப் பெண்மணிகள் தவச்சாலையின் சோதனைகளையும் கடந்தாக வேண்டுமா. இதுவே ஒரு பெரிய தவமாக அல்லவா இருக்கிறது!'' என்றாள் இளவரசி.

பேசிக்கொண்டே விடுதியிலே மேலும் நடந்தாள் இளவரசி. பொன்மணியும் கூடவே நடந்தாள். ஆதிரை அடிகளுக்கு உள்ளத்துக்குள் துணுக்கம் ஏற்பட்டாலும், எது எப்படி நடக்க வேண்டும் என்பது ஊழ்வினையோ, அப்படியே நடக்கும் என்று மனத்திடம் கொண்டு, அவளும் மேலே நடந்தாள்.

''இளவரசி! பயிற்சி என்றும், சோதனை என்றும் நாங்கள் சொல்லுகிறோமே தவிர, சிந்தித்துப் பார்த்தால் எந்த நிகழ்ச்சியும் நம் கையில் இல்லை. முற்பிறப்பிலும் வினைப் பயனிலும் உள்ள அடிப்படையான நம்பிக்கைதான் இத்தகைய தவச் சாலைகளுக்கு அடிக்கல்லாக நிற்கிறது. யார் எப்போது துறவியாக வேண்டும் என்று ஊழ்வினையோ, அதன்படி அது நடக்கும்! நாம் தடுத்தால் நின்று விடாது; வரவேற்றால் வந்து விடாது! பயிற்சி, சோதனை என்றெல்லாம் சொல்லுவதும் இந்த ஊழ்வினையின் ஒரு செயல் தான்!''

பேசிக் கொண்டே அந்தத் தவச் சாலையின் விடுதிகளிலே ஆதிரை அடிகளுக்குரிய பெரிய கூடத்துக்கு வந்து சேர்ந்தார்கள் மூவரும்!

''இளவரசியார் உள்ளே வரலாமே!'' என்று சொல்லி இளநன்னியைத் தமது கூடத்துக்குள் அழைத்தார் ஆதிரை அடிகள்!

எந்தச் சந்திப்பு நிகழக் கூடாது என்று அஞ்சினளோ அதே சந்திப்பு நிகழ்ந்து விட்டது! இளநன்னி பொன்மணியைச் சந்தித்து விட்டாள். அதுவும் தவச்சாலையிலே சந்தித்து விட்டாள். ஆனால் யார் எவர் என்று இனம் தெரியாத நிலையில் பொன்மணியைச் சந்தித்திருக்கிறாள் இளவரசி. இதிலும் ஊழ்வினையின் செயல் எதுவோ இருக்கிறது போலும் என்று எண்ணிக் கொண்டே ஒரு விநாடி தயங்கினாள் ஆதிரையம்மை. அடுத்த விநாடி பொன்மணியை விரிவான முறையிலே அகன்ற சொற்களிலே அறிமுகம் செய்தாள்.




வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் சிகரெட்டுகளைப் பிடிப்பவர்களின் தொகை இப்பொழுதெல்லாம் அதிகமாகத் தொடங்கியிருக்கிறது. இதற்குக் காரணம், சென்ற மே மாதம் வெளியான பட்ஜெட்டில், சிகரெட்டுகளின் மீதான பிரதான வரி உயர்த்தப்பட்டதன் விளைவாகக் கள்ளத்தனமாக வரும் வெளிநாட்டு சிகரெட்டுகள், உள்நாட்டுச் சரக்கைவிட மலிவாகக் கிடைப்பதுதான்! தரம் உயர்ந்த இந்திய நாட்டுச் சிகரெட்டுகள் நாலு ரூபாய் என்றால், அதே தரம் வாய்ந்த அமெரிக்க சிகரெட்டுகள், 3.50க்கு விற்கப்படுகின்றன. —தில்லிச் செய்தி

---

''இந்த அம்மையும் துறவுக்காகப் பயிற்சி பெறுகிறவர்தான். ஆனால் எங்களைப் போன்ற துறவிகளையெல்லாம்விட வாழ்வு என்ற உலையிலே வெந்து, சோதனை என்ற கூடத்திலே ஊழ் என்னும் சம்மட்டியினால் உள்ளம் முழுதும் நன்கு அடிபட்டு உருவான ஓர் உத்தமி!''

''அப்படியா! நிற்கிறீர்களே. அமருங்கள்!'' என்றாள் இளவரசி.

ஆதிரையடிகளும் பொன்மணியும் கூடத்திலே இருந்த தவ இருக்கைகளில் அமர்ந்தார்கள். அகன்ற வெண் துகில் இருக்கையிலே இளவரசி அமர்ந்தாள்.

''போரில் நமது படை வெற்றி பெற்றதற்கு யார் யாரோ ஏதேதோ காரணங்கள் கூறுகிறார்கள். என் வரையில் இரண்டே இரண்டு காரணங்களே நான் சொல்லக்கூடும்! முதலாவது காரணம், செவ்வந்தி அடிகளுடைய வாழ்த்தும், அதோடு இணைந்த உங்களைப் போன்ற சான்றோர்களின் வழிபாடுமேயாகும். இதில் ஐயமில்லை!'' என்று பேச்சைத் தொடங்கினாள் இளவரசி இளநன்னி.

''செவ்வந்தி அடிகளுடைய வாழ்த்து என்று சொன்னீர்களே, அதிலேயே எல்லாம் அடங்கி விட்டது. எங்களுக்கு என்று தனியான ஆற்றல், பிரித்துச்

சொல்லக் கூடிய ஆற்றல் ஒன்றுமில்லை. இந்தத் தவச்சாலையிலே சாக்கியத் துறவிகள் பலர் இருக்கிறார்கள். இதை யடுத்த அண்மை விடுதிகளிலே தமிழகத்துச் சமயங்கள், உட்சமயங்கள், புறச் சமயங்கள் எல்லாவற்றையும் சேர்ந்த சான்றோர் பலர் இருக்கிறார்கள். எங்கள் எல்லோரையும் ஒருமித்து இணைப்பது செல்வந்தி அடிகள் என்ற பேராற்றல்தான். அந்த ஆற்றலை என்னவென்று சொல்வது! போர் நடைபெற்ற காலத்தில் பெண்டிர்களையும், உங்களைப் போன்ற அரசச் சுற்றத்தார்களையும் இந்தப் பெருந்துருத்தித் தீவைச் சுற்றியுள்ள பல பவளத் தீவுகளில் அப்படி அப்படியே பங்கீடு செய்து அவரவருக்குரிய முறையிலே பாதுகாவல் புரிந்த ஆற்றல் இருக்கிறதே அது ஈடு இணையற்றது! சொல்லப் போனால் செல்வந்தி அடிகளை நாங்கள் ஒவ்வொருவரும் எங்கள் தலைவர் என்று கொண்டாடுவது போலவே, அரசர்களும் பொது மக்களும் கொண்டாடும்படி விந்தை மிகுந்த அந்தப் பேராற்றல் இயங்குகிறது! சாக்கியர்கள் அவரைச் சாக்கியத் துறவி என்பார்கள். சமணர்கள் அவரைத் தங்கள் தலைவர் என்கிறார்கள். மற்ற ஒவ்வொரு சமயத்தாரும் தங்கள் தங்களுக்குரிய தலைவராகவே அவரைக் கொண்டு போற்றுகிறார்கள். அரசர்களோ அவரைத் தங்கள் ஞானத் தலைவன் என்று வழிபடுகிறார்கள். அனுபவத்திலோ என்றால் மூன்று காலமும் உணர்ந்த ஒரு ஞானியாகவும், சமய வேறுபாடுகளையும், பூசல்களையும் தாண்டி நிற்கிற ஒரு சித்தராகவும் அவர் திகழ்கிறார். நீங்கள் இங்கே வரப் போகிறீர்கள் என்று எங்கள் இருவரிடமும் தனியாக வந்து சொல்லிவிட்டுப் போய் விட்டார்! நாம் மூவரும் இங்கே அமர்ந்து இப்படித் தனியாக இருந்து, நமக்குள் பேசப் போகிறோம் என்பதற்காகவே அவர் இப்படி ஓர் அறிவிப்பை எங்கள் இருவரிடமும் சொல்லி விட்டுச் சென்றிருக்கிறார் போலும்! எது எதானாலும் இளவரசியார் இங்கே வந்து எங்களுடன் இருந்து பேசக்கூடிய ஒரு வாய்ப்புக் கிடைத்தமைக்காக நாங்கள் மகிழ்ச்சி அடைகிறோம்!'' என்றார் ஆதிரையம்மை!

''அடிகள் உங்களிடம் நான் இங்கே வருவது பற்றிச் சொன்னாரா? சரி, சரி! அவர் இங்கே திரும்பி வரும் வரை என்னை உங்கள் கூடத்திலேயே இருக்கும்படி என்னிடம் சொன்னார். இங்கே தங்குவதே ஒரு நல்ல அனுபவமாக இருக்கும் என்று மெச்சிப் பேசினார்!''

இவ்வாறு கூறினார் இளவரசி. இந்தச் சொற்களை இதுவரை மோனமாகக் கேட்டுக் கொண்டிருந்த பொன்மணி இப்போது இளவரசியைப் பார்த்துக் கேட்டாள்:

''இளவரசியாரே! போரின் வெற்றிக்கு இரண்டு காரணங்கள் என்று கூறினீர்களே, இரண்டாவது காரணத்தைச் சொல்லவில்லையே —''

''பார்த்தீர்களா? செல்வந்தி அடிகளைப் பற்றிப் பேச ஆரம்பித்ததும் எங்கெங்கோ சுழன்று விட்டது மனம்! போரின் வெற்றிக்கு இரண்டாவது முக்கியமான காரணம், கோசர் குலத்தின் பழியைத் துடைத்து மெழுகுவதற்காக என்றே எங்கள் அழலாடி முனைந்து நின்றார் அல்லவா, அந்த உறுதியைக் கண்டு வானத்திலும் நடுகல்லிலும் இருந்து ஆசி வந்துவிட்டது! எனவே, போரில் வென்று விட்டோம்!'' என்றாள் இளநன்னி.

'எங்கள் அழலாடி' என்று இளவரசி சொன்ன சொற்களைக் கேட்டதும், பொன்மணிக்கு உள்ளத்திலே மின்னல் மின்னியது; இடி இடித்தது.

''உங்கள் அழலாடியா? கோசர் குலத்தின் பழியா??'' என்று கேட்டுக் கமறினாள் பொன்மணி.

''தவச்சாலையிலே இருப்பவர்களுக்கு அதெல்லாம் எப்படித் தெரியும்? தவம் என்ற கனலில் வெந்து வெந்து அவிந்து கொண்டிருக்கிற நீங்கள், முல்லை மூதூரிலே பிடித்து எரிந்த நெருப்பையும், அந்த நெருப்பிலே வெந்து சாம்பலாகி விட்ட கோசர்குல மகளையும் பற்றி எப்படி அறிவீர்கள்?''

இளவரசி இந்தச் சொற்களைச் சொல்லி முடித்தாளோ இல்லையோ, அப்படியே பொன்மணிக்கு ஒரு வினாடி தலை சுற்றியது. அந்தச் சுழற்சியிலே இதுவரை புரியாமல் சுழன்ற ஒரு பெரும் புதிர் இப்போது புரியத் தொடங்கியது! அந்த வினாடியில் ஆதிரையடிகள் அப்படியே அதிர்ந்து போய் இளவரசியைப் பார்த்துக் கேட்டார்:

''பொன்மணி நெருப்புக்கு இரையாகி விட்டாளா? வெந்து சாம்பலாகி விட்டாளா? இளவரசியாரே, நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?''

இவ்வாறு கேட்டாள் ஆதிரையம்மை.

''அடிகளே, இந்த மும்முனைப் போரிலே சேர மன்னனுடைய ஆற்றலையும் செங்குட்டுவ இளவரசனுடைய
















# லீக்கோ

நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் லிமிடெட்,
நெய்வேலி-1

FOS NLC 807 TM A

## காதலனின் குறை!



"காங்கிரஸில் உள்ள குற்றம் குறைகளை எடுத்துச் சொன்னால் மேலிடத்துத் தலைவர்கள், "கட்சிக் கட்டுப்பாடு", "கட்சியைப் பழிக்கக் கூடாது" என்றெல்லாம் சொல்லி வாயை அடைத்து விடுகிறார்கள்" என்றார் ஸ்ரீமதி தாரகேசுவரி சின்ஹா.

அ. இ. காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் இப்படிக் கூறிய அவர் இதற்கு மேற்கோளாக ஒரு கவிதையையும் சொன்னார்:

"'கண்ணெடுத்தும் பார்க்காதே'
என்கிறார்கள் என்னை — ஆனால்
அவளை வெளியே வராதே
என்று யாரும் சொல்லுவதில்லையே!"

என்று காதலன் குறைப்பட்டுக் கொண்டதாக வரும் ஹிந்தி கவிதைக் குறளைப் பலத்த கரகோஷத்துக்கிடையே மொழிந்தார் அவர்.

---

ஆற்றலையும் பற்றி வரலாற்றில் மெச்சிப் புகழப் போகிறார்கள் என்றால், அந்தப் புகழுக்குரிய முறையிலே வீரம் புரிந்தோர் பலர் உண்டு. அந்தப் பலரினும் வேலவன் கோதையும் அழலாடியும் புரிந்த விந்தைச் செயல்களைத் தமிழக வேந்தர்கள் சொல்லிச் சொல்லி வியந்த வண்ணம் இருக்கிறார்கள். அத்தகைய அழலாடி, அத்தகைய வீரச் செயல்கள் புரிந்ததற்கு முழு முதற் காரணமாக விளங்கியவளே, பொன்மணி என்ற உத்தமிதான்!" என்றான் இளநன்னி!

"அப்படியா!" என்று கேட்டாள் ஆதிரையம்மை!

"அப்படியா!" என்று எதிரொலி செய்தாள் பொன்மணி!

"ஆம். ஆனால் அவளுடைய ஆசை நிறைவேறியதைக் காணக் கொடுத்து வைக்கவில்லை அவளுக்கு! அவளுடைய கணவன் அவளைக் கரம் பற்றிய அதே நாள் இரவில் கோசர் குலப் பழியைத் துடைத்து மீளுவேன் என்று சொல்லிப் புறப்பட்டு, மன்னனின் உடம்பு என்று நினைத்து இந்த இளவரசியைத் தூக்கிச் சென்ற மாறாட்டம் இருக்கிறதே, அது தான் ஊழ் செய்த ஒரு சூது! அந்தச் சூது பொன்மணியின் வாழ்வைத் தீய்த்தது. அதனால்தான் எனக்கு இந்த வாழ்வு வாய்த்தது! அதை எண்ணி எண்ணி எத்தனையோ மகிழ்ச்சிக்கு இடையிலும் நானும் அழலாடி வீரரும் நாள்தோறும் வெந்து குமைகிறோம்! அந்த உத்தமருடைய உள்ளத்திலே பொன்மணிக்கு உள்ள இடம் அத்தகையது! அவருடைய இதயம் என்ற அரசுக் கட்டிலிலே அமர்ந்து செங்கோல் ஓச்ச வேண்டிய பொன்மணியின் இடத்திலே என்னை அவர் அமர்த்தினார் என்று சொல்வதைவிட, எனக்கும் இடம் கிடைத்தது என்று சொல்லுவதுதான் உண்மையாகும்.

ஏனென்றால், முல்லைமூதூரில் மினுமி ஏற்றிய நெருப்பு அந்த ஊர் முழுவதையும் சுடுகாடாக்கி, அந்த உத்தமி பொன்மணியையும் தீய்த்துப் பொசுக்கி யிராவிட்டால், அழலாடியின் வாழ்வும் என் வாழ்வும் இரண்டுமே வேறு எப்படியோ சென்றிருக்கும்! நீங்கள் இருக்கும் தவச் சாலையில் நான் இருந்திருப்பேன். நான் இருக்கும் அரச மாளிகையில் பொன்மணி இருந்திருப்பாள்! ஆனால் ஊழ் என்று ஒன்று நம்மை எப்படியெல்லாமோ ஆட்டிப் படைக்கிறது அல்லவா! வெந்து பொசுங்கி மறைந்துவிட்ட உத்தமியை எண்ணி எண்ணிக் கண்ணீர் வடித்துக் கொண்டே இருந்தார் அழலாடி! கொங்கு அரண்மனையிலே அரசச் சோலையின் பாறைகளிலே அமர்ந்து, தொலைதூரத்திலே மலைக் காடுகளில் பிடித்து எரியும் நெருப்பைப் பார்த்து விட்டுக் கண்ணீர் வடிப்பார் அவர்! இப்படித்தானே முல்லைமூதூரிலே நெருப்புப் பிடித்திருக்க வேண்டும், இப்படிப்பட்ட நெருப்பிலேதானே என்னுடைய பொன்மணி தீய்ந்து மாய்ந்திருக்க வேண்டும் என்று, மனம் வெந்து நீறு ஆவார் அழலாடி! அதைக் காணக் காண என் மனம் துயரம் அடைந்தது. நானும் வெதும்பினேன். துளுநாட்டு அரண்மனையிலே கொடுங்கோலனான தந்தையும், நய வஞ்சகனான தாளைத் தலைவனும் என்னை வற்புறுத்தி வந்த ஒரு சூழ்நிலையிலே, எனக்கு விடுதலை கிடைத்தது ஊழ்வினை செய்த ஆள்மாறாட்டத்தினால்! அந்த விடுதலையை எனக்கு வழங்கிய வள்ளல் அழலாடி! அவர் நெருப்பிலே மறைந்த மனைவியை எண்ணி எண்ணி நாள்தோறும் தவிப்பதைப் பார்க்கப் பார்க்க என் மனமுமே வெந்தது! இரக்கம் அன்பாக மாறியது. நன்றியுணர்ச்சியானது பேரன்பாகக் கனிந்தது. அவருடைய கால்களைத் தொட்டு வணங்க வேண்டிய நன்றியானது, அவருடைய கரங்களையே பற்றி அன்பு செலுத்தக்

தொடங்கிற்று! அவர் மருண்டார். குழம்பினார். கலங்கினார். அந்த மருட்சிக்கும், அந்தக் குழப்பத்துக்கும், அந்தக் கலக்கத்துக்கும் ஓர் ஆறுதல், ஒரு தேறுதல், ஒரு வகையான அரவணைப்பு வேண்டியிருந்தது. என் நன்றியுணர்வு அன்பாக மாறி அந்தக் கடமையை மேற்கொண்டது. மரணத் தறுவாயிலும் சூலபாணிக் கிழவர் சொன்ன மொழிகள் இதற்கு உறுதி தருகின்றன. ஆனாலும், ஆனாலும் இன்றைக்கும் இத்தனை மகிழ்ச்சிக்கு நடுவிலும், கோசர் மகளின் நினைவு வந்துவிட்டால் அவர் படுகிற பாடு சொல்லி முடியாது! அப்போதெல்லாம் நானும் தனியாகத் தவிக்கிறேன். மறைந்து சென்ற கோசர் மகள் ஒரு முறைதான் தீயிலே வெதும்பினாள். அவரும் நானுமோ வென்றால் நாள்தோறும் வெந்து வெந்து மடிகிறோம்! தவறு செய்து விட்டோமோ என்று அவருக்கு ஒரு தவிப்பு. அவரைத் தவறு செய்யும்படி செய்துவிட்டேனோ என்று எனக்கு ஒரு தவிப்பு! என்ன செய்வது! நீங்கள் எல்லாரும் துறவிலே பயின்றவர்கள். நீங்கள் எல்லாரும் துறவுக் கனலிலே உள்ளத்தின் பாசங்களை யெல்லாம் புடம் இட்டுப் பொன்னாக்கி நிற்கும் சான்றோர்கள்! நீங்களும் பெண்கள்! ஒரு பெண்ணுள்ளத்தைப் புரிந்து கொள்ளத் தெரிந்தவர்கள். உங்களிடம் என் மன உணர்ச்சிகளையும், அவர் படும் துயரங்களையும் வெளியிட்டுச் சொல்வதிலே எனக்கு ஒரு விடுதலை உணர்வு உண்டாகிறது. வெளியிட்டு விட்டேன்! எங்கள் செயலை நீங்கள் ஒப்புக் கொண்டால், சரி என்று தீர்ப்புச் செய்தால், அதுவே எனக்கு ஒரு நிம்மதி. இப்படிச் சொல்லுகிறேனே தவிர, சில வேளைகளில் நானே என்னை ஒப்புக் கொள்ளத் தயங்குகிறேன். அந்த உத்தமரிடம் என் உள்ளத்தைப் பறி கொடுத்து விட்டேன் என்பது உண்மை. ஆனால் அந்த நிலையிலும், அவருடைய மனைவியை நான் சந்திக்க நேரிட்டிருந்தால் என்ன செய்திருப்பேன் தெரியுமா? என் அன்பை, என் உள்ளத்தை, நான் தியாகம் செய்திருப்பேன்! எனக்கு அந்தத் துனநாட்டு அரண்மனையிலிருந்து, விடுதலை கொடுத்துக் காப்பாற்றிய அந்த உத்தமருக்கு, அவருடைய வாழ்வின் இன்பத்துக்கு, நான் செய்யக்கூடிய நன்றிக் கடனாக அதைக் கருதி என் வாழ்வையே நான் துறந்திருப்பேன்! அதுதான் சொன்னேனே, அழலாடி வீரரின் மனைவி தீயிலே வெந்து மறைந்திருக்காவிட்டால், நான் உங்களைப் போல ஒரு துறவியாகி யிருப்பேன், என்னுடைய அரச வாழ்விலே கோசர்குல மகளை வீற்றிருக்கச் செய்திருப்பேன்! அதற்கு இடம் இல்லாதபடி அங்கே மனம் குறுக்கிட்டது. இந்த நிலையில் நான் வேறு என்ன செய்திருக்க முடியும்? வாழ்விலே தேறுதலும் ஆறுதலும் பெற்றுத் தனது துயரங்களிலிருந்து சற்று நேரம் விடுபட்டு, இதயவெளியிலே காற்று வாங்குவதற்கான ஒரு சூழ்நிலை அவருக்கு வேண்டும் என்பதை, மனப்பூர்வமாக உணர்ந்தவள் நான்! இந்நிலையில் அவருக்கு வாழ்விலே என்னை நான் வழங்க எண்ணினேன். இது தவறா? இது பிசகா? இது ஒரு குற்றமா? என்னையே நான் அடிக்கடி கேட்டுக் கொள்கிறேன். கேள்விக்குரிய விடை எனக்கு இன்னும் கிடைக்கவில்லை. வாழ்வின் சிக்கல்களைக் கண்டு தெளிந்தவர்களும், அறத்தின் இயல்புகளை ஆய்ந்து தேர்ந்தவர்களுமாகிய சான்றோர்கள் நீங்கள்! விடை காண முடியாத என்னுடைய கேள்விகளை இப்போது உங்களிடமே கேட்கிறேன். எனக்கு விடை வழங்குங்கள்! உங்களுடைய விடுதியிலே தங்கினால் எனக்கு நிம்மதி கிடைக்கும் என்று சொல்லி என்னை இங்கே அனுப்பியிருக்கிறார் செல்வந்தி அடிகள்! ஆதிரையம்மையே, துறவிகளே, பெண்மை உள்ளத்தின் துயரங்களை யெல்லாம் புரிந்து கொள்ளக்கூடிய இயல்பும், அறத்தை எடுத்துக் காட்டக்கூடிய ஞானமும், துன்பத்திலிருந்து விடுதலை தரக்கூடிய பக்குவமும் நிரம்பிய நீங்கள்தான் எனக்கு விடை சொல்ல வேண்டும்!''

ஆதிரை அடிகளைப் பார்த்து இவ்வாறு கூறிப் பெருமூச்சு விட்டாள் இளநங்கை.

சற்று நேரம் மோன ஒருமையிலே சிந்தனை கூடி நின்றவாறு கண்களை மூடியிருந்தார் ஆதிரை அடிகள். பிறகு கண்களைத் திறந்தார். சொல்லுவார்:

''இளவரசி, சிக்கலும் துயரக் குமைவும் நிரம்பிய உங்களுடைய கேள்விக்கு விடை சொல்லக் கூடிய அநுபவம் நிறைந்தவர் இதோ இருக்கிற இந்த அம்மைதான்! ஆம், அவர்தான் இளவரசிக்கு விடைசொல்லவேண்டும்!''

இவ்வாறு கூறிப் பொம்மலியைப் பார்த்தார் ஆதிரையம்மை.

(தொடரும்)

## ஒரே ஜோர்!

ஒரு தடவை நெப்போலியன் தளபதிகளை விருந்துக்கு அழைத்திருந்தார். குறிப்பிட்ட நேரத்தில் அவர்கள் வராததால் தனியாக உணவருந்த ஆரம்பித்து விட்டார் நெப்போலியன். அவர் உணவருந்தி முடியும் தறுவாயில் அவருடைய தளபதிகள் ஒருவர் பின் ஒருவராக உள்ளே நுழைந்தனர். உடனே சாப்பாட்டு மேசையை விட்டு நெப்போலியன் எழுந்து நடந்து கொண்டே கூறினார்: ''கனவான்களே! சாப்பிடும் நேரம் முடிந்து விட்டது. இப்பொழுது வேலை செய்யும் நேரம் தொடங்கி விட்டது. வாருங்கள் நாம் ஒரு நிமிடமும் வீணாக்காது வேலையில் ஈடுபடுவோம்.''

காலி வயிற்றைத் தடவிக்கொண்டே தளபதிகள் நெப்போலியனைப் பின்தொடர்ந்தனர்.



தகவல்: எஸ். ராமு

ஆதாரம்: ''முன்னேறுவது எப்படி?''



● புதிதாகக் கல்யாணம் செய்து கொண்டு ஊருக்குப் போகும் தம்பதிகள் பெண்ணின் பெற்றோரிடம் விடை பெற்றுக்கொள்ளும்போது உணர்ச்சி வசப்பட்டு மணப்பெண் அழுதாள். உடனே தாயார்: ''இதோ பாரு! இனிமேல் எங்களை நினைத்து அழப்படாது.... இனிமேல் மாப்பிள்ளை....'' என்று நீட்டினாள். உடனே மாப்பிள்ளை...''ஆமாம் இனிமேல் மாப்பிள்ளையை நினைத்துத்தான் அழணும்!'' என்று சிரித்தபடியே கூறினார்!

## படிப்பது ராமாயணம்

## இடிப்பது....!

'சோஷலிஸம்' பற்றிப் பக்கம் பக்கமாக அறிக்கை விடப்பட்ட சமீபத்திய டில்லி 'அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி' மகாநாட்டிலேயே சோஷலிஸம் காற்றில் பறக்க விடப்பட்டது!

சோஷலிஸம் பற்றிப் பறைசாற்றிய இம் மகாநாட்டுக்கு வந்திருந்த காங்கிரஸ்காரர்களுக்கு இரண்டு சிற்றுண்டி சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. ஒன்று காங்கிரஸ் மேலிடத் தலைவர்களுக்காகவும், மற்றது சாதாரண காங்கிரஸ் தலைவர்களுக்காகவும் தனித்தனியே அமைக்கப்பட்டன. 'சோஷலிஸம்' பேசுபவர்கள் இப்படி வித்தியாசம் காட்டலாமா? இதுதான் சோஷலிஸமா?

இதை எந்த சுதந்திரக் கட்சிக்காரரும் கூறவில்லை. 'விபூதி மிஸ்ரா' என்ற காங்கிரஸ் எம். பி.யே இதை மகாநாட்டில் கூறினார்!

ஆதாரம்: 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'



பல்சுவைப் பக்கம் 1



ஒரு பைபிள் புத்தகத்தை
சமையல் பைக்குள்
ஒரு துப்பாக்கியைப்
போல் மறைத்துக்
காட்டி நியூயார்க்
கடைக்காரரின் பணத்
தைப் பறிக்க முயற்சி
செய்த ஒருவர் கைது
செய்யப் பட்டார். திரும்
வதற்கு பைபிளின்
உதவியை நாடியது
உலகிலேயே இது
தான் முதல் தடவை!

— சேந்து

ஆதாரம்: பேஜண்ட்.

## புனிதமான திருட்டு!

## இயந்திர காஷியர்!

'காஷியர்'கள் ஒரு முறைக்கு நாலு முறை ரூபாய் நோட்டுகளை எண்ணி இனி சிரமப்பட வேண்டாம். அதற்கும் ஒரு இயந்திரம் வந்து விட்டது! இந்த இயந்திரத்தில் நோட்டுக்களைக் கத்தையாகப் போட்டு விட்டு, நமக்குத் தேவையான தொகைக்கு டயல் செய்தால், சில விநாடிகளில் சரியாக நோட்டுக்கள் வந்து விழும்! இது பிரிட்டனில் கண்டு பிடிக்கப்பட்டுப் பல பாங்கிகளில் இயங்கி வருகிறது!

"காங்கர" — ச. ஸ்ரீதரன்





"இதோ இந்த வெண் பனியைப் போன்ற சருமமும், என் விரலில் ஊசி குத்தியதால் வெளிப்படும் இரத்தத்தைப் போன்ற சிவந்த அதரங்களும், அதோ பறக்கிறதே காகம் அதைப் போன்ற நிறத்தில் அடர்த்தியான கேசமும் உடைய ஒரு பெண் எனக்குப் பிறக்கக் கூடாதா?" என்று ஏங்கினாளாம் ஒரு தாய். ஆண்டவனும் அவளுக்கிரங்கி 'ஸ்னோ ஒயிட்' என்ற அதிலாவண்யமான மகளைத் தந்தானாம்.

அது போலத்தான் இன்றைய நாகரீக மங்கையும் புது ரகத் துணிகளுக்காக ஏங்குகிறாள். பருத்தி ஆடையில் உள்ள குளிர்ச்சியும் சுகமும்; டெரிலின் போன்ற செயற்கைத் துணிகளில் காணப்படும் மடிப்புக் கலையாத, சுருக்கம் விழாத சீக்கிரம் உலரும் தன்மைகளும்; பட்டிலே உள்ள மென்மையும் இணைந்து

## இன்றைய நாகரிகம்

காணப்பட வேண்டும் என்கிறாள். இந்த ஆசையைப் பூர்த்தி செய்யும்முகமாக 'காலி கவிந்த்' (படம்), 'காலிகட்', 'காலி எஸ்தர்' முதலிய நூதன ரகங்களைக் காலிகோ மில்ஸ் தயாரித்துத் தருகிறது.

அண்மையில் இவற்றை மந்திரி சத்தியவாணி முத்து அவர்கள் முன்னிலையில் சென்னை மாதர்களுக்கு அறிமுகப் படுத்திய தயாரிப்பாளர்கள், இப்புடவைகள் மேற் சொன்ன குணங்களைப் பெற்றிருப்பதோடு மிக மெல்லியன என்பதையும் நிரூபித்துக் காட்டினார்கள். ஆதி நாளில் தரமான டாக்கா மஸ்லின் பல கெஜ நீள முள்ளதாயினும் சரி, ஒரு சிறு பொடி டப்பிக்குள் அடங்கிவிடும் என்று கூறப்படுவதுண்டு. இவர்கள் முழு நீளப் புடவை ஒன்றை ஒரு சிறு வளையத்தினுள் நுழைத்து அதன் மென்மையை உணர்த்தினார்கள்.

தரத்
தேயிலைத்
தூள்களிலே
தனிப்பெருமை
வாய்ந்தது




# லிப்டன்ஸ் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ

குணமும், சுவையும் நிறைந்த பொன்னிறமுள்ள டீ யை
'வெகு சீக்கிரத்தில் இந்தத் தேயிலையைக் கொண்டு
அதிகமான கப்புகளைப் பெறுவீர்கள். இந்த
ஒப்புயர்வற்ற டீ யை நீங்களே பருகிப் பாருங்கள்
—உங்கள் விருந்தினர்களுக்கும் கொடுங்கள்
நிச்சயமாக இதை ரசித்து நீங்கள்
மகிழ்வீர்கள—ஆம்'—அப்படியே உங்கள்
விருந்தினர்களும்கூட' தரத் தேயிலைத்
தூள்களில் லிப்டன்ஸ் ஹிமாலயன்
கோல்டன் டஸ்ட் தனிப்பெருமை வாய்ந்தது.
தன்னிகரற்றது என்பது உண்மை.



**லிப்டன் என்றாலே**

**நல்ல டீ**




LHGC-4 TAM



# நம்பிக்கை

அட்டைப் படக் கதை

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

மாலை இருள் பந்து பந்தாகத் திரள ஆரம்பித்து விட்டது. தெருவில் ரச விளக்கு மூச்சு விட்டுக் கொண்டு சுடர் பெருகினாற் போல் இருந்தது. கௌரி படி இறங்கி வீட்டின் வாசல் வரை வந்து நின்றாள். அவள் பார்வை தெருக் கோடி வரை ஓடி ஓய்ந்தது.

ரகு இன்னும் வரவில்லை. கார் ஹாரன் ஒன்றும் கேட்கவில்லை. அவன் வரத் தாமதமானால் தகவல் வரும். இப்போதெல்லாம் அவன் அப்படித் தகவல் கொடுப்பதும் இல்லை. காத்திருக்கட்டுமே என்று விட்டு விட்டது போலக் கூடத் தோன்றும் அவளுக்கு. பெருமூச்செறிந்தபடி உள்ளே திரும்பினாள். படிக்கட்டில் உட்கார்ந்து, முகத்தைக் கையில் தேக்கிக் கொண்டு யோசனையில் ஆழ்ந்தாள். நாய்க்குட்டியும் காலை நீட்டித் தலையைத் தரையில் கவிழ்த்துக் கொண்டு படுத்திருந்தது.

திடீரென்று நாய் எழுந்து சிலுப்பிக் கொண்டு வாசலை நோக்கி ஓடிற்று. அவளுக்கும்கூட ஹாரன் சத்தம் கேட்பது போல இருந்தது. எழுந்து நின்றாள். இரட்டைக் கண்ணும் ஒளியை உமிழ்ந்து கொண்டு கார் வந்து கொண்டிருந்தது. மெல்லியதாய்க் கிளம்பிய அதன் ஓசை பெரிதாய் வீங்கிக் கொண்டே நெருங்கிற்று. பக்கத்து வீட்டிலும் அடுத்த வீட்டில் ஓய்ந்தது போல அடங்கி நின்றது. விளக்குகள் அணைந்து இருள் சூழ்ந்ததில், தெரு விளக்கின் மினுக்கமும்கூட ஏற்படவில்லை.

கதவைத் திறந்து கொண்டு மாலதி இறங்கினாள். நன்றி சொல்லும் குரல்; வேண்டாமென்று மறுக்கும் குரல். சிரிப்புக் கலந்த பேச்சு; பதில் சிரிப்பு. கார் வீட்டை நோக்கி நகரத் தொடங்கி விட்டது. அவளுக்கு நினைவில் ஏதோ தடுக்கியது. சிந்தனையில் குழம்பியபடி, இறங்கிப் போய்க் கார் 'ஷெட்'டின் கதவைத் திறந்து விட்டாள்.

காரின் கதவை அடித்து மூடிவிட்டு, ஏதோ ஒரு பாட்டின் மெட்டை முனகியபடி, கைப் பையை மார்பில் அணைத்துக் கொண்டு பின்னால் நடந்து வந்தான் ரகு. அவளை அவன் முகம் கொடுத்துப் பார்க்கவில்லை. ஒரு தன்னிரக்கம் அவளுள் பொருமி அவளை வாட்டிக் கொண்டிருந்தது.

கால் பூட்ஸ் கயிற்றை அவிழ்த்தபடி அவனே சொல்லிக் கொண்டான். கல்லூரி நாடகம் ஒன்றுக்கு டிக்கெட் விற்கத் தோழிகளுடன் மாலதி காரியாலயத்துக்கு வந்திருந்தாள். அவளை அவன் அப்படியே வீட்டுக்குக் கொண்டு வந்து விட வேண்டியதாயிற்று......

அலுப்பு சலிப்பு இல்லாத அந்தக் குரல், வேலை முடிந்து திரும்பும் களைப்பு அதில் இல்லை என்பது மட்டும் அல்ல. வயதின் போக்கும் அதன் சாயலாய் விழும் நிழலும் கூட அவனைச் சூழவில்லை. எந்தச் சமயமும் தன்னுள் உவகை பூத்தவண்ணம் அவனால் எப்படி இருக்க முடிகிறது? சற்றேனும் களைப்புத் தட்டாது சதா களை திகழும் முகத்துடன் நாளின் ஒவ்வொரு பகுதியையும் ஏற்றுக் கொள்ள முடிகிறது?

சாப்பிட்டு விட்டு ரகு நாற்காலியில் சாய்ந்தபடி வானொலியில் செய்தி கேட்டுக் கொண்டிருந்தான். அவன் தூங்க மணி பதினொன்று ஆகும். இங்கிலாந்துக்குப் போய் விட்டுத் திரும்பியபிறகு வந்த பழக்கம் அது. அதற்கு முன்பெல்லாம் ஒன்பது மணிக்கு விளக்கு அணைந்துவிடும். அவன் பேசிக் கொண்டே படுத்திருப்பான். அவளிடமிருந்து பதில் வராது. தன் யோசனைகளில் கூடு கட்டிக் கொண்டு மெதுவாக உறங்கி விடுவான்.

இது மாறிய பழக்கம். எத்தனையோ மாறுதல்கள். அவற்றில் இதுவும் ஒன்று.

''இரவு நேரத்தில் இந்தச் சமயத்தில் யாரும் இதைப் போல் வீட்டில் உட்கார்ந்திருக்க மாட்டார்கள். ஒவ்வொருவருக்கும் ஏதோ ஓர் 'எங்கேஜ்மெண்ட்'. பொழுது போக்கு. வாழ்க்கை மகிழ்ச்சியாய்த் துளித்துக் கொண்டு கிளம்புவதே இருள் கவிய ஆரம்பித்த பிறகுதான்!''

பேசிக் கொண்டே ரகு ரேடியோவை மூடினான். அணைந்த ஊதுவத்தியின் மண நினைவுகள் கமழ்ந்தன. ஏதோ ஓர் ஏக்கம் வளையமிட்டது போன்ற குரல்.

''பனி பெய்து கொண்டிருக்கும். ஆனால் குளிருக்குப் பயந்து யாரும் முடங்குவதில்லை.

சில சமயம் நள்ளிரவு வரையில் பாட்டும் கேளிக்கையுமாக இருந்து கொண்டிருக்கும். நான் இருந்த வீட்டின் ஒரு பகுதியில் ஆலிஸ் என்ற பெண் இருந்தாள். வெகு அழகாய்ப் பியானோ வாசிப்பாள். அடிகள் பிசகாமல் நடனம் ஆடுவாள்....."

"நீங்கள் ஆடி இருக்கிறீர்களா?"

"இரண்டொரு தடவைகள். சரியாக ஞாபகம் இல்லை. அதைப்போல் ஒரு பொழுது போக்கில், நேரம் செலவாகும் களிப்பு இன்றி, யாருடன் எப்படிச் செலவிடுகிறோம் என்ற நினைப்பு இல்லை."

அவள் கண்களை மூடிக் கொண்டாள். அந்தப் பெண்ணின் உருவம் கற்பனையில் மிதந்தது. மங்கிய விளக்கொளியில், இழையும் இசையின் தாளம் தவறாமல் அவள் ரகுவுடன் கைகோத்து ஆடும் காட்சி தெரிந்தது.

"என்ன, தூக்கம் வந்து விட்டதா ?"

"ம்."

"போய்ப் படுத்துக் கொள்."

அவள் எழுந்து படுத்துக் கொள்ளப் போய் விட்டாள். தூக்கம் கண்களை அழுத்தவில்லை. ஓர் இனம் புரியாத வேதனைதான் மனத்தை அழுத்திற்று. தலையணையை அழுத்தியபடி முகம் திரும்பிக் கட்டிலில் படுத்துக் கொண்டாள். அந்த இருட்டே மனத்துக்கு இதமாக இருந்தது.

அடுத்த அறையில் ரகு மெதுவாய்ச் சீட்டி அடித்தபடி நடக்கும் சத்தம் கேட்டது.

கலியாணமாகிப் பதினைந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. அவர்களுடைய குழந்தைகள் இருவரும் ஊரில் தாத்தாவிடம் வளர்ந்து கொண்டிருக்கின்றனர். அவன் மேற்படிப்புக்காக மூன்று வருஷங்கள் கம்பெனிச் செலவில் மேல்நாடு போனபோது அங்கேபோய் ஒண்டிக் கொண்ட குடும்பம். குழந்தைகளை அப்புறம் பிரித்து அழைத்துக் கொண்டு வருவது எளிதாக இல்லை. படிப்பின் தொடர்ச்சி கெட்டு விடுமோ என்ற பயம் வேறு.

தனியாக அவர்கள், வாழ்க்கையில் இரண்டாவது முறையாகக் குடித்தனம் தொடங்கினார்கள். ஆனால் எவ்வளவு வித்தியாசம்? வெகு தூரத்தில் விளிம்பு ஓரமாகக் கேட்கும் பாட்டைப் போல் அந்த நினைவு தெரிந்தது.

அவள் இல்லாமல் அவனுக்குப் பொழுது போகாது. இயல்பாகவே நான்கு பேர்களோடு கலகலவென்று சிரித்துப் பேசிப் பழகாத சுபாவம். மணமான புதிது. அவனுடைய பிரியங்கள் அனைத்தையும் பங்கிட்டுக் கொள்ளக் கிடைத்தது அவள்தான். அந்த உறவும், அதன் சிறுபிள்ளைத்தனமான விளையாட்டுக்களும், பேச்சும் சீண்டலும்தான் அவன் பொழுது போக்கு. சில சமயம் அவன் கேலி செய்தாலும்கூட அவன் அதைப் பொருட்படுத்தமாட்டான்.

இந்துவும் குமாரும் பிறந்த பிறகும்கூட அந்த இயல்பு அவனை விட்டு அகலவில்லை. அவர்களுடன் மூன்றாவது குழந்தையாக அவனும் சுற்றி வந்து கொண்டிருப்பான். அவள் இல்லாமல் அவனுக்கும் பொழுது போக முடியாது என்று எண்ணுவதைப் போல. காரியாலயத்துக் கதைகளையும்கூட, அவள் மடியில் தலையை வைத்துப் படுத்தபடி வம்பளந்தால்தான் மனத்துக்கு ஒரு திருப்தி.

அவன் தங்கையிடம் கூடப் பேச ஒரு தயக்கம். நிமிர்ந்துபார்க்கமாட்டாமல் ஒரு கூச்சம். அவன் அப்படிக் கூட்டுப் புழுவாய் ஒதுங்கிச் சுருங்கிக்கொண்டு விடுவதைப் பார்க்க அவளுக்கு வேடிக்கையாகக்கூட இருக்கும். அவளைப் பார்க்க வரும் தோழிகள், வீட்டுக்கு வந்து கூடும் உறவினர்கள், எல்லாரும் அதைக் குறிப்பிடுவது வழக்கம். ஆனால் அதுவே அவளுடைய இரகசியப் பெருமை. அவனுடைய சுவாதீனமான அன்பு முழுவதும் அவளுக்குத்தான். அந்த நினைப்பில் அவள் இதயம் பெருமிதம் ததும்பப் பூரிக்கும்.

அவர்கள் எங்கேனும் போக நேர்ந்தாலும், அவளுடைய நிழலாகத்தான் தொடர்ந்து கொண்டிருப்பான் அவன். அவள் எங்கு சென்றாலும், என்ன செய்தாலும் அவன் பார்வை அவளையே தொடர்ந்து அவனுக்குப் பழக்கமாகி விட்டது. பிறர் அதைச் சொல்லி அவளைக் கேலி செய்வது அவனுக்குத் தெரியும். அவன் அதைப் பொருட்படுத்துவதில்லை.

அந்த ரகுவா இது?

விளக்கை அணைப்பது தெரிந்தது. நெருங்கும் காலடிச் சத்தம். கண்களை மூடித் தூங்குவது போல அசைவற்றுப் படுத்திருந்தாள்.

ரகுவின் துணை அதிகாரி ஒருவர் மாற்றலாகிப் போனார். அதற்காக விருந்து ஏற்பாடாகியிருந்தது. திறந்தவெளியில் விளக்கு வெளிச்சத்தில், அவரவர்களுக்கு வேண்டியதை அவரவர்களே எடுத்துக் கொண்டு நின்றபடியே சாப்பிடும்படி அமைந்த விருந்து.

அவள் அதைப் போன்ற விருந்துகளுக்குப் போவது பழக்கமில்லை. சமீபத்தில் ரகு அவளை வரும்படி கூப்பிட்டு அவள் ஓரிரு தடவைகள் வர மறுத்ததும் உண்டு. இன்று அவளுக்கு ஒரு புது அனுபவம்.

அவள் மட்டும் தனியே நின்று கொண்டிருந்தாள். அறிமுகம் இல்லாமல் பிறருடன் பேசவும் கூச்சமாக இருந்தது. ரகு சற்று விலகி ஒரு பெண்ணுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தான். தோள்பட்டை தெரிய அணிந்த சோளியும், இடையின் சரிவும், குழைவும் கண்ணை உறுத்தும்படி அணிந்த புடவையும், நழுவும் மேலாடையை இடக்கையில் சுற்றியபடி முதுகு தெரிய நின்ற விதமும் அவள் பார்வை எதிரில் எழுந்தன. நெற்றிப் பொட்டும் யாரோ துருவியதுபோல் இருந்தது.

ரகு அவள் புறமாக வந்தான். அவனுடைய நிழலாக அவளும் வருவது தெரிந்தது.

"அனுபமா ராய்..... இவள்தான் என் மனைவி கௌரி.....!"

அவள் கையைக் குவித்துப் புன்னகை செய்தாள். கௌரியின் பார்வை அவளது நகக் கண்ணின் வெட்டிலும் இதழ்களின் சாயத்திலுமே பதிந்து நின்றது.

அவளுக்குத் தெரியும்: அவனுக்கு அடியோடு அவை பிடிக்காமல் இருந்தது. அதற்காக அவளும் அவற்றை உபயோகிப்பதில்லை. எவ்வளவு மாறி விட்டான் ரகு?

அவர்களுடைய குரல் வேற்றுமையாக ஒலித்தது. மெல்ல மெல்ல விலகிப் போயிற்று.

அவள் செடி ஓரமாக நிழல் தேங்கும் இடம் பார்த்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். கலங்கிய கண்களால் மின்மினிப் பூச்சி பறப்பதைப் [illegible] செடிகளில் பதித்த விளக்குகளின் அலங்காரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். தோட்டத்தைப் பார்க்கவில்லை; கடந்து போன கால வெளியைத் தான் பார்த்துக் கொண்டிருந்தது அவள் மனம். பின்னால் நகர்ந்து பிரம்பில் முதுகு படச் சாய்ந்து கொண்டாள்.

நேரம் நழுவியது தெரியவில்லை. யாரோ விரலால் நாற்காலியின் பிடியில் தட்டும் சத்தம் கேட்டுக் கண் விழித்தாள். ரகு நின்று கொண்டிருந்தான். ''போகலாமா? உடம்பு சரியில்லையா, உனக்கு?''

''உடம்பு சரியாகத்தான் இருக்கிறது.''

''பின்னே ?''

''போகலாம்'' என்று கிளம்பினாள்.

பிற்பகல் நேரம். அவள் பூத்துணியும் வர்ண நூலுமாக உட்கார்ந்திருந்தாள். பக்கத்து வீட்டுப் பெண் ஓர் ஆங்கிலப் பத்திரிகையைக் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போனாள். கல்லூரியில் படிக்கிறாள் அவள். அங்கு வந்தால் ரகுவிடம், அவள் மேனாட்டு அநுபவங்களைப் பற்றிக் கண்கலை மணிக் கணக்காய்க் கேட்டுக் கொண்டிருப்பாள். இதைப் போன்ற பத்திரிகைகளும் அவனிடமிருந்து போகும்.

அவளுக்கு வெகு அருகில் இருக்க, அவள் நன்றாக அறிந்து வைத்திருக்க, ரகு அவனிடமிருந்து விலகிவிட்டது போன்ற உணர்ச்சி. அது மட்டும் அல்ல. அவள் உணர்ச்சிகள், ஆசை, ஆர்வம் எல்லாம் இப்போது அகன்று பெருகிவிட்டன. முன்போல அவைகளுக்கு எல்லை இல்லை.

வீட்டில் குழந்தைகள் இல்லை. இருந்திருந்தால் அவன் கவனம் திரும்பி யிருக்குமோ என்னவோ ? அவர்கள் இருவருக்குமே, குழந்தைகள் பொதுவாய், உணர்ச்சிகளை இணைக்கும் பாலமாக இருந்திருப்பார்களோ என்னவோ? அவைகளுக்குப் பதிலோ சமாதானமோ தெரியாததால் அவள் வேதனை அதிகரித்தது. எதுவும் வேண்டி யிருக்கவில்லை.

அன்று காலையிலிருந்தே அவளுக்கு உடம்பு சரியாக இல்லை. காஸ் அடுப்பில் கொதிக்க வைத்த நீர் நாவுக்கு அப்படியே சாப்பிட இதமாக இருந்தது. இவ்வளவு தாகம் ஏன்? இவ்வளவு சூடு ஏன்?

நாடியைப் பிடிக்க முடியாமல் தெறித்தது. பிற்பகலில் கண்ணயரப் படுத்திருந்தவள் எழுந்திருக்க முடியவில்லை. கண்ணெரிச்சலும் உடல் நடுக்கமுமாக நல்ல ஜுரம். தர்மா மீட்டரை நாக்கின் அடியில் வைத்துப் பார்த்த போது ரசக் கோடு நூற்றி ஒன்றைத் தாண்டி யிருந்தது.

அப்படியே படுத்து விட்டாள். அரைத் தூக்கமும் கால் தூக்கமுமாக மாறி மாறி வந்த விழிப்பிலும் கனவிலும் ஒன்று மட்டும் குழப்பமின்றித் தெரிந்தது. ரகு வீட்டுக்குத் திரும்பவில்லை. மணி ஒன்பதும் ஆகிவிட்டது. எங்கேயோ செய்தி வானொலியில் கேட்டது.

## அலாதியான அஜாதி



அரசாங்கம் பயன்படுத்தும் சொற்றொடர்களின் உட்பொருள் என்னவாக இருக்கும் என்பதைச் சுதந்திரக் கட்சி பார்லிமெண்ட் உறுப்பினர் திரு என். தாண்டேகர் மக்கள் சபையில் விளக்கினார்.

ஏதாகிலும் ஒரு விஷயம் அரசாங்கத்தின் ''பரிசீலனையில் உள்ளது'' என்றால், அவ் விஷயம் பற்றிய ஃபைல் காணமற் போய் விட்டது என்று பொருள் கொள்வாராம்.

ஒரு விஷயம் அரசாங்கத்தின் ''தீவிர கவனமும் பெற்று வருவ'' தாகக் கூறப்பட்டால் காணமற்போன பைல் கிடைத்து விட்டது என்று அர்த்தம் செய்து கொள்வாராம்.

—ஹிந்துஸ்தான் டைம்ஸ்

---

அவளுக்கு உடம்பு சரியில்லை என்பதனால் அல்ல. நன்றாக இருந்தால் மட்டும் என்ன? அவனுக்கு அவளிடம் சுவாரசியம் குறைந்து விட்டது. ஈடுபாடு மங்கிவிட்டது.

ரகு வந்து படுத்துக் கொண்டு விட்டான். அவளைப் பற்றிச் சமையற்காரப் பையன் சொல்லி யிருப்பான். அவள் நெற்றியில் அவன் விரல்கள் அக்கறையாக ஒரு முறை படியக்கூட இல்லை. அவள் கண்களை விழிக்கவில்லை. ஏதோ ஒரு பலவீனத்தில் அழுது விடுவோமோ என்ற பயம். அவளைத் தொந்தரவு செய்ய வேண்டாம் என்று அவன் விலகி இருந்து விட்டானா ?

காலையில் டாக்டர் வந்து போனார். அவருடன் ரகுவும் போய் விட்டான். ஏதோ அவசரமான காரியாலயத்து வேலை இருந்ததாம். அவள் தலைக் கனத்துக்குத் துணியை இறுகக் கட்டிக் கொண்டு சாய்வுநாற்காலியில் படுத்திருந்தாள்.

''தபால்.''

விசிறி மடிப்பாய்த் தபால்காரரின் கையில் ஐந்தாறு கடிதங்கள் இருந்தன. அவற்றில் ஒன்று வெளி நாட்டுக் கடிதம். ஆகாய வர்ணமாய் வெளிர் நீல உறை. மேலே தெரிந்த எழுத்துக்களில் அவள் பார்வை ஒன்றியது. அவை ஒரு பெண்ணுக்கு உரியவை. அடியில் பெயரையும் எழுதி யிருந்தாள் ஓர் ஓரமாக; ஸிக்ரிட்! நார்வே தேசத்துப் பெண்.

மற்றக் கடிதங்களில் மனம் ஓடவில்லை. குழந்தை வியப்பாய் முகத்தில் நிழல் படர்ந்தது. மூடி திறவாத பெட்டியைப் போல் அந்தக் கடிதம். அதில் என்ன இருந்தது ? அவள் அறிந்து கொள்ளலாம். ஆனால் தெரிந்து கொள்ள வேண்டாம் போலவும் இருந்தது. அவளுக்கும் ரகுவுக்கும் இடையே குறுகிய ஆனால் ஆழ்ந்த பள்ளம் கிடந்தது

## ஐந்து கண்கள்!



நீங்கள் ஐந்து கண்களை உடைய உயிரினத்தைப் பார்த்திருக்கிறீர்களா? 'இல்லை' என்று கூறுவீர்கள். ஆனால் நாம் எல்லோரும் தினம் பார்க்கிறோம் இந்த உயிரினத்தை. அதுதான் தேனீ!

இதன் முன் பக்கமுள்ள இரு கண்களைத் தவிர, இதன் தலையின் பின்புறம் மூன்று சிறிய கண்கள் அமைந்துள்ளன!

ஆதாரம்: "ஸ்புட்னிக்"
தகவல்: வி. சம்பத் குமார்

---

போல. தாண்டக்கூடிய ஆனால் தாண்டக் கூசுகிற பள்ளம் போல.

ரகு இங்கிலாந்திலிருந்து வந்த பிறகு, அவளிடம் ஒரு நாள்கூட அவன் அந்தக் கேள்வியைக் கேட்டதில்லை. அவனுடைய மன உறுதியில் அவளுக்கு முழுமையான நம்பிக்கை இருந்தது. பெட்டியிலிருந்த நிழற்பட ஆல்பங்களைக்கூட அவன் பிரித்துப் பார்க்க எண்ணியதில்லை. அவன் அறிந்து கொள்ள வேண்டியது எதுவும், அவளிடம் இரகசியமாகத் தங்கி விடாது என்ற உறுதி அவனுக்கு இருந்தது. இப்போது ஏன் இந்தக் கலக்கம்?

இப்போது அல்ல; கொஞ்ச நாளாகவே இது இருக்கிறது. கும்மட்டித் தணலில் சிதறும் பொறியைப் போலப் பொறுமையற்ற நினைவுகள். அவற்றில் இதுவும் ஒன்று.

சலிப்பின்றி மனம் தவித்தது. அவள் நினைவுகளை அவள் வேறு யாருடனும் பகிர்ந்து கொள்ள மாட்டாள். அவளுடைய அன்பு, ஆசை, பிரியம், யாவும் முழுமையாக அவனுக்கேதான் இருக்க வேண்டும். குழந்தை நப்பாசையாக அவை சிதறுவதைக்கூட அவளால் பொறுத்துக் கொள்ள முடியாது.

கையில் நடுங்கிய அந்த நீலக் கடித உறை....

மாலையில் வீடு திரும்பியதும் அந்தக் கடிதத்தை அவனிடம் கொடுத்தாள் கௌரி. அவன் முகத்தில் தெரிந்த வெளிச்சமும் ஆர்வமும் மனத்தை உடனே உறுத்துவது போன்ற உணர்வு. நாற்காலியின் பிடியில் உட்கார்ந்தபடியே கடிதத்தைப் படித்தான் அவன். அந்தப் பார்வையில் கனிந்து நின்ற அவளைப் பார்க்கத் துணிவில்லாதவளைப் போல் அவள் பார்வை தாழ்ந்து நின்றது

அவளிடம் கடிதத்தை நீட்டினான் ரகு. விளக்கின் வெளிச்சத்தில் அதைப் பிரித்துப் பார்த்தபோது எழுத்துக்கள் மங்கின. கண்களில் ஓர் அயர்ச்சி படர்ந்தது.

"நீங்களே படியுங்கள்."

கண்களை மூடிக் கொண்டாள். மனத்திரையில் முகம் தெரியாத அந்தப் பெண்ணின் உருவம். காதருகே ரகுவின் குரல்.

கடிதத்தைக் கேட்டுக் கொண்டே வந்த போது அந்த வரிகளில் அவள் மனம் ஒன்றியது.

"எனக்கும் ராக்னருக்கும் இந்த மாதம் இருபதாம் தேதி திருமணம். நீங்கள் இல்லையே என்று எங்கள் இருவருக்கும் குறை. உங்களை ஒரு நல்ல கணவனின் உதாரணமாக அடிக்கடி சொல்லுவார் அவர். மணமானபின், நீங்கள் உங்கள் மனைவியின் நினைவில் மனம் ஒன்றி இருந்ததைப் போல், இருந்து காட்ட வேண்டும் என்பது அவருடைய அவா.

எங்களுடன் பங்கு கொண்ட எத்தனையோ விருந்துகளிலும், பொழுதுபோக்குகளிலும், கேளிக்கைகளிலும், உங்கள் மனம் ஏதேனும் ஒரு சாக்கில் ஆறாயிரம் மைல்களுக்கப்பால் இருந்த உங்கள் மனைவியை நினைத்துக் கொண்டிருந்தது. ஏதேனும் ஒரு சந்தர்ப்பத்தில் வாய்க்கு வாய் உங்கள் கௌரியைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருப்பீர்கள்....!"

கௌரியின் காதுகளில் மற்ற வாசகங்கள் விழவில்லை. முதுகில் ஒரு சிலிர்ப்பு ஓடிற்று. மனம் அந்த வரிகளையே மீண்டும் மீண்டும் முனகிற்று. ஒரு நிறைவும் ஆனந்தமும் மூச்சை முட்டுவது போல இருந்தது.

"மருந்து கொண்டு வரட்டுமா?" என்று அருகே உட்கார்ந்தான் ரகு. "ஒன்றும் வேண்டாம். சற்று இப்படியே உட்காருங்கள்" என்று அவன் கையை எடுத்துக் கொண்டாள் கௌரி. அவன் அவளைப் பார்த்து இலேசாகச் சிரித்துவிட்டு, எங்கேயோ தூரப் பார்வையாகப் பார்த்தபடி உட்கார்ந்தான்.

"நீ கொஞ்சம்கூட மாறவில்லை கௌரி. இன்னும் அப்படியேதான் இருக்கிறாய். எனக்குச் சில சமயம் தோன்றுவதுண்டு: நான்கூட என் பழக்கங்களைக் கொஞ்சம் மாற்றிக் கொண்டு விட்டேனோ என்று. ஆனால் உன்னிடம் அந்த மாறுதல்கூட இல்லை.

"மூன்று வருஷங்கள் கழித்துத் திரும்பிய போது எனக்கு ஒரு சந்தேகம். உனக்கு ஒரு சந்தேகம் என் மேல் இருக்குமோ என்பது தான் அது. ஆனால் நமக்கு இடையே ஒரு நிழல்கூட விழவில்லை. என்னை நீ புரிந்து கொண்டதைப் பற்றி நான் இரண்டாவது முறையாக யோசிக்க வேண்டிய அவசியம் கூட ஒரு முறையும் எனக்கு ஏற்படவில்லை."

கௌரி கண்கள் ஜொலிக்க அவன் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள். அங்கிருந்து விழத் துடிக்கும் நீர்த் துளிகளை விரல் நுனியால் ஒதுக்கிக் கொண்டாள்.

"வாழ்க்கையில் அதுதான் முக்கியம், கௌரி. அந்த உறுதியான அசைக்க முடியாத நம்பிக்கையில்தான் அமைதியான இல்வாழ்க்கையைக் காண முடியும். அடிக்கடி நான் அவர்களிடம் சொல்வேன். அதையே தான் இன்று லிசி எழுதியிருக்கிறாள். நம் இருவரைப் போல் இருக்க வேண்டுமென்று அவர்களுக்கு ரொம்ப ஆசை."

கணவனிடம் சொல்ல முடியாத, தனக்குள்ளே உழைய விட்டுக் கொண்டிருந்த அந்த உணர்வை, அவன் அறியாமல் அழுத்தித் துடைக்க முயன்ற வண்ணம், நிமிர்ந்து உட்கார்ந்தாள் கௌரி.

# பயர்ஸ்டோனின் 'தூப்-ர்-டஃப்' விந்தை ரப்பர் டயர்களுடைய உழைப்பை மேன்மேலும் நீடிக்கச் செய்கிறது. இதனால் ஐயம் ஏற்படுகிறது. இவைகளுக்கும் பூனைகளுக்குக் கூறப்படுவதுபோல



## ஒன்பது உயிர்களோ!

'சூப்-ர்-டஃப்' விந்தை ரப்பர் ஒவ்வொரு பயர்ஸ்டோன் டயருக்குள்ளும் அடங்கி, அவை அதிக மைல்கள் ஓடும்படி செய்கிறது. எந்த காரோட்டியும் சந்தோஷப்பட இது போதும். மற்றொரு சந்தோஷகரமான அம்சம்—எந்த வித மேற்பரப்புள்ள சாலையிலும், எதனுடைய வேகத்திலும் உயர்ந்த பிடிப்புறுதிக்காக அதிகமான பரப்பளவு ரப்பர் சாலையில் பதியச் செய்யும், பயர்ஸ்டோன் கார் டயர்களிலுள்ள வியப்பூட்டும் 'ராப்-அரவுண்ட்' டிரெட் டிசைன். சந்தோஷ மிகுதியில் பூனை போல உறுமுகிறீர்களோ? செய்ய வேண்டியதுதான்!

**Firestone**

பயர்ஸ்டோன 'ராப்-அரவுண்ட்' டிரெட் கூடிய டீலக்ஸ் சாம்பியன் டயர்

பயர்ஸ்டோன் உங்களுக்கு தரம், உழைப்பு இவைகளின் சின்னம்




## 83. திருவாரூர் பிறந்தார்

சிவலோகம் எனப் பொலிவது திருவாரூர். திருத்தொண்டத் தொகை விளைந்த ஞான வயல் இப்பதி. திருக்கயிலையில் வாழும் சிவ கணங்கள், உலகை உய்விக்கும் பொருட்டுச் சிறப்புமிக்க திருவாரூரில் பிறந்தார்கள். ஆதலினால் அவர்கள் பெருமை அளவிடற்கரியது.

> அருவாகி உருவாகி அனைத்துமாய் நின்றபிரான்
> மருவாரும் குழலுமையாள் மணவாளன் மகிழ்ந்தருளும்
> திருவாரூர்ப் பிறந்தார்கள் திருத்தொண்டு தெரிந்துணர
> ஒருவரால் சிறிதேனும் உரைக்கலாம் தகைமையதோ

திருவாரூர்ப் பிறந்தார்களது பெருமையை ஒருவரால் உரைக்க ஒண்ணாது என்று உரைக்கிறார் சேக்கிழார். திருவாரூர்ப் பிறந்தார்களைப் பணிந்து ஒடுங்கிய உள்ளம் உடையவர்க்கு உயர்கதி எளிதாகும்.

## 84. முப்போதும் திருமேனி தீண்டுவார்

சிருட்டி காலத்திலே அநாதி சைவராகிய சதாசிவ மூர்த்தியின் ஈசானம், தத் புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்ற ஐந்து திருமுகங்களிலின்றும், கௌசிகர், காசிபர், பரத்துவாசர், கௌதமர், அகத்தியர் என்ற ஐந்து முனிவர்கள் அவதரித்தார்கள். அவர்களுடைய மரபினர் ஆதி சைவர் என்று சொல்லப் பெறுவர்.

இவர்களுக்குள்ளே சமய தீட்சை, விசேட தீட்சை, நிர்வாண தீட்சை ஆகிய ஆசார்ய அபிஷேகங்களைப் பெற்றவர்களே சிறந்தவர்கள். பூசை முதலிய செய்யப் பெரிதும் உரியவர்கள். பரார்த்தப் பிரதிட்டை, பரார்த்த பூசை செய்வதற்கு அவர்களே உரியவர்கள். ஆதலின், அவர்களே வேதாகமங்களை ஓதி ஆலயங்களில் சிவலிங்கப் பெருமானை முப்போதும் தீண்டிப் பூசிக்க எப்போதும் உரியவர்கள்.

அளவற்ற அன்புடைய ஆதிசைவர், எப்போதும் இனிமையான ஈசனை மேலும் விருப்புடன் சிவாகம நெறி வழுவாது வழிபாடு செய்வார்கள். செல்காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற முப்போதும் திருமேனி தீண்டிப் பூசனை புரிவார்கள். வழி வழியாகப் பூசிக்கும் உரிமையுடையவர்களாகிய அவர்களுடைய குலப் பெருமை புகழுந் தரமன்று.

## 85. முழுநீறு பூசிய முனிவர்கள்

வினைகளை நீறாக்குவது திருநீறு. உடல் நோய்களையும், உயிர் நோயாகிய பிறவியையும் போக்கவல்லது திருநீறு.

''அருநோய்கள் கெட வெண்ணீறணியாராகில்'' என்று அப்பரும், ''திருவெண்ணீறிடா மூடர்'' என்று அருணகிரிநாதரும் கூறுகின்றனர்.



பசுவின் சாணம் நச்சுக் கிருமிகளைக் கொல்லும் ஆற்றல் உடையது; நாற்றத்தை மாற்றவல்லது. ஈயம் பூசிய பாத்திரத்தைப் பசுவின் சாணத்தால் சுத்தி செய்வதும், நேர்வாளத்தையும் பசுவின் சாணத்தால் சுத்தி செய்வதும் கண்கூடு. தாம்பரத்தை விடத் தாம்பர பஸ்பம் அதிக ஆற்றல் பெறுவதைப் போல், பசுவின் சாணத்தினும், அதனாலாகிய நீறு அதிக ஆற்றல் படைத்தது. சாதாரண சாம்பலைத் தெளித்துச் செடி கொடிகளில் உள்ள கிருமிகளை மாற்றுகின்றனர். விதிப்படி செய்த திருநீற்றைக் கலாமந்திரம், சம்மிதா மந்திரங்களைக் கூறி அணிவதனால் பிணி, இடர் முதலியன நீங்குவதுடன், பூசுவோர் எல்லா நலன்களையும் பெற்று இன்புறுவர். அவ்வாறு அணியும் போது, ''சிவய நம'' என்று ஐந்தெழுத்தை ஓதுதல் வேண்டும்... திருவாய்ப் பொலிய சிவாய நம என்று நீறணிந்தேன் தருவாய் சிவகதி நீ பாதிரிப் புலியூர் அரனே'' என்கிறார் அப்பர் பெருமான்.

''அருள்சேர் நீறிடார் அமுதுணக்கிடினும்
அம்மலத்தினை அருந்துதல் ஒழிக''

என்கின்றார் இராமலிங்க அடிகளார்.

சிவமூர்த்தி அருளிச் செய்த சிவாகமங்களில் திருநீறு கற்பம், அநுகற்பம், உபகற்பம் என உரைக்கப்படும். இம்மூன்று வகையான திருநீற்றை யணிய வேண்டும். அகற்ப நீற்றினை யணியக் கூடாது. விதிப்படி திருநீறு புனைவார் காமம் முதலிய அறுபகை நீங்குவர்.

கன்றையுடைய பசுஞ்சாணத்தை, பஞ்சப் பிரமந்திரம் கூறி ஏற்றுப் பஞ்ச கவ்யம் விட்டுப் பிசைந்து உருண்டைகளாகச் செய்து உலர்த்தி, சிவமந்திர ஓமாந்திர ஓம நெருப்பிலுள்ள அக்கினியால் சிவசிந்தையுடன் எரித்து எடுத்த திருநீறு கற்பம் ஆகும்.

காட்டில் உலர்ந்த பசுவின் சாணத்தைக் கொணர்ந்து பொடித்துக் கோநீர் விட்டுப் பிசைந்து அஸ்திரமந்திரம் கூறி உருட்டி உலர்த்தி ஓம நெருப்பினால் எரித்தது அநுகற்பம் ஆகும்.

காட்டுத் தீயில் வெந்த நீறும், பசுந் தொழுவத்தில் வெந்த நீறும், வேள்வியில் வெந்த நீறும் எடுத்து, கோநீர் விட்டுப் பிசைந்து மந்திரம் கூறி உருட்டி உலர்த்தித் திருமடங்களில் விளங்கும் சிவாக்கினியால் உருட்டி எடுத்தது உபகற்பம் ஆகும். இந்தப்படி அல்லாதது அகற்பம்.

திருநீறு திரிபுண்டரமாகவும், அர்த்த சந்திர வடிவாகவும், இப வடிவாகவும், வட்ட வடிவமாகவும் அணிவார்கள் நற்குலத்தில் பிறந்தோர்கள்; தரும குணசீலர்கள்; உண்மை நெறியை உணர்ந்தவர்கள்; நீதி நெறி வழுவாதவர்கள். நித்தியமும் திருநீற்றை உடம்பு முழுவதும் அணிந்து மும்மல நீக்கம் பெறுவார்கள்.



## 86. அப்பாலும் அடிசார்ந்தார்

**சை**வ சமயம் மிகவும் பரந்தது. ''நிற்பதுவும் சரிப்பதுவும் சைவமே யாம்'' என்கின்றார் திருஞானசம்பந்தர். சைவ சமயம் தேசத்தாலும், காலத்தாலும் கட்டுப்படாதது. இன்னும் பதினாயிரம் ஆண்டுகளுக்கு அப்பால் சிவநெறி நின்று முத்தி பெற்றார்களாயினும் அவர்களுக்கும் அடியேன்'' என்று கூறுகின்றனர்.

எல்லாச் சமயங்களையும் தனக்கு அங்கங்களாகக் கொண்டு, சமயங் கடந்த சாந்த பீடத்தில் அமர்ந்து ஞானச் செங்கோல் தாங்கி அன்பு மயமாய் அருள் ஒளி வீசி அரசு புரிவது சைவ சமயம். மிகப் பெரிய சமயம் அது.

சைவ சமய மேசமயம்
   சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளி
   காட்டுமிந்தக் கருத்தை விட்டு
பொய்வந் துழலும் சமயநெறி
   புகுத வேண்டாம் முத்திதரும்
தெய்வ சபையைக் காண்பதற்குச்
   சேர வாரும் சகத்திரே! -தாயுமானார்

சேர சோழ பாண்டியர்கள் என்னும் மூவேந்தர்களுக்குரிய தமிழ் நாடேயன்றி அப்புறத்திலுள்ள நாடுகளில் வாழ்ந்து இறைவனடி சார்ந்தவரும், திருத்தொண்டத் தொகை பாடும் காலத்துக்கு முன்னாகவும் பின்னாகவும் உள்ள அடியார்களும் அப்பாலும் அடிசார்ந்தார் எனப்படுவர்.



''என் வீட்டுக்கு வலது பக்கத்து வீட்டிலே மிருதங்கம் நாராயணசாமியும், இடது பக்க வீட்டிலே பிடில் சிவசாமியும் குடியிருக்கிறார்கள்.''

''பேஷ்! நீங்கள் இருக்கும் தெரு பெயர் என்னவோ?''

''கச்சேரி ரோடு தான்!''

## 87. ''மனத்தினால் முயன்ற கோயில்''

**பு**றவழிபாட்டின் பயன் அகவழிபாட்டால் விளையும். அக வழிபாடு புரிவது எளிதன்று.

போதும் பெறவிடில் பச்சிலை
   புண்டு புனலுண்டெங்கும்
ஏதும் பெறவிடில் நெஞ்சுண்டு
   இன்றே இணையாகச் செய்யும்
ஆதும் பெருமூலைப் பங்கர்
   தென்தோணி புரேசர் வண்டின்
தாதும் பெறாத அடித்தாமரை
   சென்று சார்வதற்கே

''வழிபாட்டிற்கு ஒன்றும் கிடைக்கவில்லையானால் நெஞ்சுண்டு; அந்த நெஞ்சால் வழிபட வேண்டும்'' என்ற இத்திருப்பாடலுக்கு இலக்கியமானவர் பூசலார் நாயனார்.

எக் காலத்திலும் ஒழுக்கத்தால் உயர்ந்த நாடு தொண்டை நாடு. அந்நாட்டில் நான்மறை உணர்ந்த வேதியர்கள் நிறைந்து வாழ்கின்ற நற்பதி திருநின்றவூர். செல்வம் மிகுந்த அவ்வூரிலே மறையவர் மரபில் வந்தவர் பூசலார் நாயனார். அவர் உள்ளத்தில் எழும் உணர்வு எல்லாம் சிவபெருமான் திருவடி மீது செலுத்தி, வேதநீதி வழுவாது வாழ்ந்தார்.

கங்கையை முடித்த சங்கரனுக்கு ஒரு திருக்கோயில் புதுக்க வேண்டும் என்று பூசலார் எண்ணினார். தம்மிடத்தில் பொருள் இல்லாமையை எண்ணினாரில்லை. எங்கெங்கோ திரிந்து அலைந்து முயன்று பொருள் தேடினார். ஒரு சிறிதும் பொருள் கிடைக்கவில்லை. உள்ளம் நைந்தார். ஏங்கினார். பின்னர் மனத்தாலே திருக்கோயில் புதுக்க வேண்டும் என்று துணிந்தார். அதற்கு வேண்டிய நிதி, கருங்கல், மரம், சுண்ணாம்பு முதலிய கருவி, கரணங்களை யெல்லாம் மனத்தில் சேகரித்துக் கொண்டார். ஒரு நல்ல நாள் பார்த்து, திருப்பணியை மனத்தில் தொடங்கினார். குறிப்பிட்ட நேரத்தில் இவர் ஒருபுறத்தில் அமர்ந்து, மனத்தில் கடைக்கால் போட்டார். இரவிலும்

# ஏரோப்ளை
## சாம்ப் பிளைவுட்

அழகும் கவர்ச்சியும் கொண்டது நியாயமான விலையில் கிடைக்கின்றது.

வீட்டினுட்புற மறைப்புச் சுவர், கூரையினுட்புறம் பர்னிசர்கள் ஆகியவற்றிற்கு உபயோகிக்கப் படுகின்றது. நேர்த்தியான பினிஷ். உறுதியானதும் கூட.

கல்கத்தா நேஷனல் டெஸ்ட் ஹௌஸின் அத்தாட்சி பெற்றது




தயாரிப்பாளர்கள்:

**உட்கிராப்ட்ஸ் அஸ்ஸாம்**

புரொப்: ஜெய் ஸ்ரீ டீ & இண்டஸ்ட்ரீஸ் லிட்.,
இந்தியா எக்சேன்ஜ் கல்கத்தா-1

கல்கத்தா ஆபீஸ்: இந்தியா எக்ஸ்சேன்ஜ் பில்டிங், 2வது ப்ளோர், கல்கத்தா-1. போன் நெ. 22-4520. தந்தி: ஏரோப்ளை பம்பாய் ஏஜெண்ட்டுகள்: தயாலால் மகன்ஜி ஜுவேரி, கிரேட் வெஸ்டர்ன் பில்டிங், 60, ஸர் பி. எம். ரோடு, பம்பாய்-1. போன்: 26-5051 26-6394. தந்தி: ஜெய்குபேர். டில்லி ஆபீஸ்: 7531/3, டெல் மில் ஸ்ட்ரீட், ராம்நகர், புதுடில்லி. போன்: 261927. தந்தி: ஜெய் டிகார்டு சென்னை ஏஜெண்டுகள்: வி. சாதுமுனி செட்டி கோ, 11, காசி செட்டி லேன், சென்னை-1. போன்: 34093 தந்தி: ஸரோஜா. அகமதாபாத் ஏஜெண்டுகள்: மோகன்லால் ஜுவாப்சந்த் ஷா, காலுபூர் ரோடு, தங்கசாலை அருகில் அகமதாபாத். போன்: 53394. தந்தி: கர்சிப்.

# ஒவ்வொரு துளியிலும் ஊக்கம் துள்ளும்

மற்றெந்த உணவு பானத்தையும் விட அதிக மால்ட் அடங்கியது ஒவல்டின்! மால்ட் என்பது சக்தி தரும், இயற்கையின் ஒப்பற்ற ஊட்டப் பொருள்களில் ஒன்றாகும். 1932 முதல் எல்லா ஒலிம்பிக் ஆட்ட விழாக்களிலும் அங்கீகாரம் பெற்ற ஒரே ஒரு பானமாக ஒவல்டின் விளங்குவதில் வியப்பில்லை.

அதிக மால்ட் தவிர, பால், வைட்டமின்கள், வலிமையூட்டும் இதர சத்துக்கள் யாவும் அடங்கியது ஒவல்டின்.

அதிகத் தென்புதரும்
மால்ட் அடங்கியது
ஒவல்டின்

உழைப்பாளிகளுக்கும், வளரும் குழந்தைகளுக்கும் இன்றியமையாத, உன்னதமான உணவுபானம் ஒவல்டின்.

ஒவ்வொரு நாளும் அருந்துங்கள் ஒவல்டின்.

ஒவ்வொரு துளியிலும் ஊக்கத் துள்ளலை அளிப்பது ஒவல்டின்.

OVALTINE
The Supreme Food Beverage

# ஓவல்டின்

ஓவல்டினைப் பாரதத்தில் ஜகத்ஜித் டிஸ்டிலிங் & அலைட் இண்டஸ்ட்ரீஸ் லிட்., நிறுவனம், லண்டனிலுள்ள ஏ. வாண்டர் லிமிடெடின் லைசென்ஸ் பெற்றுத் தயாரிக்கிறது.

ASP/3DAG TAM

கூடக் கண் துஞ்சாது அமர்ந்து ஆலயம் புதுக்குவாராயினர். கர்ப்பக் கிருகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், கல்யாண மண்டபம், யாக மண்டபம், அலங்கார மண்டபம், திருமதில்கள் தூபி, ராஜகோபுரம் முதலிய அனைத்தும் அழகாகப் புதுக்கினார். இவ்வாறு நெடுநாள் அப்பணியை ஆற்றினார்.

அடிமுதல் உபான மாதி
ஆகிய படைக ளெல்லாம்
வடிவுறுந் தொழில்கள் முற்றும்
மனத்தினால் வகுத்து மான
முடிவுறு சிகரந் தானும்
முன்னிய முழத்திற் கொண்டு
நெடிதுநாள் கூடக் கோயில்
நிரம்பிட நினைவாற் செய்தார்

பின்னர், திருக்குளம், உற்சவ மூர்த்திகள், திருத்தேர், திருவாபரணங்கள் யாவும் அமைத்தார். எல்லாம் முடிந்தபின் கும்பாபிஷேக நாளை நிச்சயித்தார். கும்பாபிஷேகத்துக்கு வேண்டிய தர்ப்பை, சமித்து, நெய், திரவியம் முதலிய அனைத்தும் ஆயத்தம் புரிந்து கொண்டார். இரவு பகலாக அந்தப் பணியைச் செய்து கொண்டிருக்கின்றார்.

காஞ்சிபுரத்திலே காடவர்கோமான் என்ற மன்னவன் மிகுந்த பொருட்செலவு செய்து மிக அழகிய சிவாலயம் ஒன்றைப் புதுக்கிப் பூசலார் நாயனார் மானசீகமாக வைத்த நாளிலேயே கும்பாபிஷேகம் செய்யத் திட்டமிட்டான். அரசனல்லவா? அவனுடைய தகுதிக்குத் தக்கவாறு கும்பாபிஷேக வேலைகள் ஆயிரக்கணக்கான ஏவலர்கள் மூலம் நிகழ்ந்து கொண்டிருந்தன.

கும்பாபிஷேகத்துக்கு முன்னாள் காடவர்கோமான் கனவில் கண்ணுதற் கடவுள் தோன்றினார். ''அன்பனே! திருநின்றவூரிலே பூசலார் என்ற உத்தமன் பல நாட்கள் நினைந்து முயன்று முடித்த திருக்கோயிலில் நாளை கும்பாபிஷேகம்; நாம் அங்கு புகுதல் வேண்டும். ஆதலின், நீ கும்பாபிஷேகத்தை வேறு ஒரு நாளில் வைக்கக் கடவாய்'' என்று கூறி மறைந்தருளினார். பூசலாருடைய அன்பை இவ்வாறு அரசனுக்கு இறைவர் அறிவித்தார். எங்கும் எப்போதும் துலங்குபவர் ஈசன். எனினும், நமக்கு அதனை உணர இயலவில்லை. விதிபூர்வமாகக் கும்பாபிஷேகமும் பிராணப் பிரதிட்டையும் செய்தவிடத்து ஈசனின் சாந்நித்தியம் எளிதில் துலங்கும்.

காடவர்கோன் கண் விழித்து எழுந்து கனவை நினைந்து வியந்தான். 'திருநின்றவூரார் புதுக்கிய கோயிலின் கும்பாபிஷேகத்தின் பொருட்டு அடியேன் அருமையினும் அருமையாக அமைத்த ஆலய கும்பாபிஷேகத்தை மாற்றியமைக்குமாறு ஆண்டவர் ஆணை தருவாராயின் அந்த இன்னோர் அடியார் எத்துணை பெரியவரோ? அவர் புதுக்கிய திருக் கோயில் எத்துணை பெரிய சீரும் சிறப்பும் உடையதோ? நாம் சென்று அந்தக் கோயிலையும், அப் பெரியவரையும் கண்டு வணங்குதல் வேண்டும்' என்று ஆவல் கொண்டான். பரிவாரங்களுடன் புறப்பட்டுத் திருநின்றவூர் வந்தான்.

அங்கு கோயில் எங்கே என்று தேடினர். காணப்படவில்லை. எதிர்ப்பட்டோரைப் பார்த்து, ''ஐயா! பூசலார் நாயனார் கட்டிய திருக்கோயில் எங்கே?'' என்று வினவினான் மன்னன். 'இங்கே கோயில் ஏதும் அவர் கட்டவில்லை' என்றனர் அவர்கள். ''பூசலார் என்பவர் இந்த ஊரில் உள்ளவர். அவர் அதோ அந்த வீட்டில் இருக்கின்றார்'' என்றார்கள் மறையவர்கள். மன்னன் அவரை ஆட்களை விடுத்து அழைக்காமல் தானே சென்று கண்டு தொழுதான்.

''அண்ணலே! அடியேன் கச்சியம்பதியை ஆளும் காடவர்கோன் மன்னன். கச்சியம்பதியில் கண்ணுதற் பெருமானுக்கு ஒரு கற்கோயில் கவின்பெறப் புதுக்கினேன். இன்று கும்பாபிஷேகம் வைத்திருந்தேன். நேற்று இரவு கறைமிடற்றண்ணல் அடியேன்




எகிப்து நாட்டுக்குச் சென்றால் புகழ்பெற்ற ''கோதுமை கேக்''களைப் பார்க்காமல் திரும்ப முடியாது! ஆனால் அவற்றைச் சாப்பிடவும் முடியாது. பார்ப்பதோடு சரி!

புராதன கிரேக்கர்கள், எகிப்தின் வினோத வடிவம் கொண்ட கோபுரங்களைக் கண்டதும் நகைத்து, 'பிரமிட்' என்று அவற்றுக்குப் பெயரிட்டனர்.

ஏனெனில், அவை அந்நாளைய கோதுமை கேக் வடிவத்தில் இருந்தன. ஆம், பிரமிட் என்றால் கோதுமை கேக் என்றுதான் அர்த்தம்!

ஆதாரம்: ''டிட் பிட்ஸ்''
தகவல்: வி. சம்பத்குமார்

கனவில் தோன்றி, ''திருநின்றவூரில் பூசலான் புதுக்கிய கோயிலில் நாளை கும்பாபிஷேகம். நாம் அங்கு போக வேண்டும்; நீ வேறு நாள் அமைக்கக் கடவாய்'' என்று கட்டளையிட்டருளினார். தங்கள் திருவடியை வணங்கவும் அக்கோயிலைக் காணவும் ஆவலுடன் அடைந்தேன். அந்தத் திருக்கோயில் எங்கே?'' என்று வினவி மீண்டும் பணிந்தான் மன்னன்.

பூசலார் நாயனாருக்குப் புல்லரித்தது. ''அடியேனையும் ஒரு பொருளாகக் கொண்டு உனக்கு அறிவித்தனரோ? அரசே! அடியேன் அரனுக்கு ஆலயம் புதுக்க அவாவுற்றேன். அலைந்து திரிந்து தேடியும் அரும் பொன் அகப்படாததனால் அகத்தில் ஓர் ஆலயம் புதுக்கி இன்று கும்பாபிஷேகம் புரிகின்றேன்'' என்றார்.

**மன்னவன் உரைப்பக் கேட்ட**
**அன்பர்தாம் மருண்டு நோக்கி**
**என்னையோர் பொருளாக் கொண்டே**
**எம்பிரான் அருள்செய் தாரேல்**
**முன்வரு நிதிலி லாமை**
**மனத்தினால் முயன்ற கோயில்**
**இன்னதாம் என்று சிந்தித்**
**தெடுத்தவா றெடுத்துச் சொன்னார்**

அரசன் அவருடைய இதயக் கோயிலின் பெருமையையும் அரனார் இதில் எழுந்தருளும் அருமையையும் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்தான். பன்முறை அவர் பாத பங்கயம் பணிந்து, தானையுடன் மீண்டும் கச்சியம்பதி போய்ச் சேர்ந்தான்.

பூசலார் நாயனார் குறித்த நேரத்தில் இதய ஆலயத்தில் ஈசனை எழுந்தருளச் செய்து, அபிஷேகம் ஆராதனை திரு உலா முதலிய யாவும் குறைவறப் புரிந்தார். அன்று முதல் நாள்தோறும் ஆறுகாலம் வழுவாமல் இறைவனை மனக்கோயிலில் வழிபட்டு முடிவில் அம்பலவாணருடைய அடிமலர் சார்ந்து ஆராவமுத இன்பம் எய்தினார்.

## 88. மங்கை குலத் தங்கம்

**ம**ங்கையர்க்கரசியார் சோழ மன்னனுடைய திருமகளார். இவருடைய இயற்பெயர் மானி என்பது. பெண்களுக்கெல்லாம் தலைவியாம் பேறு பெற்றதனால் மங்கையர்க்கரசி என்று காரணப் பெயர் பெற்றார்.

மங்கையர்க்கரசி என்று ஞானசம்பந்தர் சிறப்பித்தருளினார். அதுவும் போதாது என்று கருதிய சேக்கிழாரடிகள், ''மங்கையர்க்குத் தனியரசி'' என்கின்றார்.

இளமையி லிருந்து சிவபெருமான் திருவடியை மறவாது சிந்தித்து வந்த மங்கையர்க்கரசி, தமது நாயகராம் கூன்பாண்டியர் சமணம் தழுவிய போது சம்பந்தப் பெருமானை வரவழைத்துச் சைவத்துக்குத் திருப்பிய சரிதம் முன்னரே கண்டோம்.

## 89. ஈசரைச் சார்ந்த நேசர்

**உ**யர்வும் ஒழுக்கமும் நிறைந்த உத்தமர்கள் வாழும் திருநகர் காம்பீலி. இது பல்லாரி மாவட்டத்தில் காம்பீலி தாலூகாவில் உள்ளது. அத்தலத்தில் காலியர் திருமரபில் அவதரித்தவர் நேச நாயனார்.

இவர் மாயவரத்தைச் சார்ந்த கூறை நாட்டில் வாழ்ந்தார் என்றும், அங்கே சிவாலயத்துள் காம்பீலியிலிருந்து கொணர்ந்த விநாயகர், தண்டபாணி என்ற மூர்த்திகளை ஸ்தாபித்தார் என்றும் ஆன்றோர் கூறுவர்.

சிவபெருமானுடைய திருத்தொண்டர்களைப் பணிந்து போற்றும் பண்புடையவர்.

இவர் மனத்தை இறைவன் திருவடிக்கும், வாக்கைத் திருவைந்தெழுத்துக்கும், கைத்தொழிலை அடியார்க்குமாகச் செய்து வாழ்ந்தார். சிவனடியார்களுக்கு உரியனவாக ஆடையும் கீளும் கோவணமும் நெய்து, அன்புடன் அடியார்களுக்கு ஈந்து மகிழ்வார். இவ்வாறு இடையறாது திருத்தொண்டு புரிந்து கண்ணுதற்பெருமானின் தண்ணிய திருவடி நிழலைச் சேர்ந்தார்.

(தொடரும்)

### ஸ்ரீஹரியின் வெளியூர் பயணம்

நாட்டு வைத்தியர் டாக்டர் ஸ்ரீஹரி அவர்கள் 15—7—67ந் தேதி ஜன்று மதராஸ் எக்ஸ்பிரஸில் சென்னையை விட்டுப் புறப்பட்டு, 17—7—67ந் தேதி தில்லி சேர்ந்து, மந்திர் மார்க்கிலுள்ள தென்னிந்தியர் கிளப்பில் (போன் 46059) தங்குகிறார்.

20—7—67ந் தேதி தில்லியிலிருந்து புறப்பட்டு 22—7—67ந் தேதி சென்னை வந்து சேருகிறார்.

# சிதறல்கள்

ம. இராஜாராம்

நூலைப் பிடித்துக் கொண்டு மலை மேல் ஏறுகிறேன். அங்கே மான் கொம்பு மேல் யானை நிற்கிறது. கண்ணாடியி லான ஆடை உடுத்தினால் தண்ணீரில் நடக்கலாம். அதனால் தான் பெண்களெல்லாம் தண்ணீர் மேல் நடக்கிறார்கள் போலிருக்கிறது. அவர்கள் எங்கே நீர்மேல் நடக்கிறார்கள்? நான்தான் நடக்கிறேன்..... ஆனால், நான் கண்ணாடி ஆடை உடுத்தவில்லையே!

பெரிதாகச் சிரிக்க வேண்டும் போலிருக்கிறது. வாய் விட்டு ஹஹ்ஹ ஹஹ்ஹா.......சிரிக்கும்போதே ஏன் அழுகை வருகிறது? கண்ணீராய்க் கொட்டுகிறதே! கண்ணீருக்குத்தான் எத்தனை சூடு! வார்த்தைகூடத்தான் சுடும்! உண்மை சுடும்! உடம்பு சுடும்; உடம்பு சுட்டால் ஜுரம் — டாக்டருக்குப் பணம். உடம்பு சுடாமலேயே நான் டாக்டர் கிட்டப்போனேன்.

எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன்—எனக்கு ஒன்றும் இல்லையென்று. கேட்காமல் அழைத்துப் போனார்கள் அந்த டாக்டரிடம்.

''ஒம் மனசிலே என்னப்பா கஷ்டம்?'' என்கிறார் அந்த டாக்டர். எனக்கென்ன கஷ்டம்? அப்பா பெரிய வக்கீல். நிறைய சொத்து. மனசிலே கஷ்டம் இருந்தாத்தான் அழ லாமா? ஆண் அழக்கூடாதென்று எவன் சொன்னது? அழும் போதே சிரித்தால் அதற்கொரு சந்தேகமா? இதற்கெல்லாம் காரணம் எதற்கு? மற்றவர்களோடு எனக்குப் பேசப் பிடிக் கவேயில்லை.

தலைகீழாக நடக்க வேண்டும். கால்தான் கை; கைதான் கால்; தலைதான்...ஏதோ போ! மற்றவர்களெல்லாம் செய்யா ததைச் செய்ய வேண்டும். ஸிதாரில் தேஷ் ராகம்...டொய்ங், டொட் டொய்ங்....இம்ரத்கான், விலயத்கான், பிஸ்மில்லாக் கான், ராகவன்கான்... ராகவன் கானு? ஹஹ்ஹஹா... என் பெயர் ராகவன் கானு? வேடிக்கையாயில்லை? ராகப்பா, ராகப்பா....

வகுப்பில் ஒவ்வொரு மேசையாக ஏறித்தாவித் தாவிக் குதித்துப் பாடம் நடத்திக் கொண்டிருக்கிற வாத்தியார் தலைமேல் ஏறி நின்று மேலே சுற்றிக் கொண்டிருக்கும் மின் விசிறியின் இலைகளைப் பிடித்துத் தொங்கியவாறே நாமும் சுற்ற வேண்டும். 'வோல்ட்டேஜ் டிவைடட் பை கரண்ட் இஸ் ரெஸிஸ்டன்ஸ்'தான். அதற்காக நீ ஏன் பல்லைக் கடித்துக் கொண்டு உறும வேண்டும்? என்னைத் தேடிக் கொண்டு யாரோ வரப்போகிறார்கள் ஃபோன் கால் வரும். இல்லாவிட்டால் காரைக் கொண்டு என்னை அவ

சரமாகக் கூட்டிப்போக நடராஜ் வருவான். எதற்கு அவசரம், என்ன அவசரம்?

சாக யாராவது அவசரப்படுவார்களா? பொறுக்க முடியாமற் போனால் பின் என்ன செய்ய? பொறுக்க முடியாமல் இப்ப என்ன? அதுதான் டாக்டர் சொன்னாரே!

அந்த டாக்டரின் வாயில் தெர்மாமீட்டரை வைத்து முழுங்கச் சொல்ல வேண்டும். இரண்டு பக்கம் இரண்டு பேராக இறுகப் பிடித்துக் கொள்ளுகிறார்கள். நெற்றிப் பொட்டில் எதையோ ஜில்லென்று தடவி, மின்சார ஒயர் பொருத்திய இரண்டு தகடுகளை இரு நெற்றிப் பொட்டிலும் வைத்து அழுத்திக் கொண்டு கண்ணை மூடிக்கொள்ளச் சொல்கிறார்.

விநாதலா நோதினியா, லாநாத விநோதினியா? ஞானப் பழத்தைப் பிழிந்தால் கே. பி. சுந்தராம்பாள் ஆகலாம். கண்டபடி எழுதுகிறார்கள், மடையன்கள்! திருப்பித் திருப்பிக் காதல். ஒரு கதாநாயகன் இரண்டு கதாநாயகிகள்... அல்லது ஒரு கதாநாயகி இரண்டு கதாநாயகர்கள்....

காதலும் மண்ணும் சமம். மண்ணிலிருந்து பிள்ளையார் பிடிக்கலாம். பிள்ளையார் பிடித்தால் குரங்காக முடியும். குரங்கு பேன் எடுக்கும். அப்புறம் மகாபலிபுரம் போகும். மகாபலிபுரத்திலிருந்து கல்கத்தாவுக்கு நடந்து போக வேண்டும். கல்கத்தாவில் குரங்கு இல்லை. குற்றாலத்தில் இருக்கிறது. குற்றாலம் எங்கள் ஊர்ப் பக்கம். அங்கேயும் இப்போது குரங்குகளைவிட மனிதர்கள் ஜாஸ்தி.

ஜுரம் வர வேண்டும். நினைவே இருக்கக் கூடாது. ஜன்னலில் எதிரே நிற்பவர்களைக் கூட அடையாளம் தெரியக் கூடாது. அம்மை வார்த்துக் கண்ணில் பொங்க வேண்டும். ஹொங்குறைஸ் ஹேரா. கண் பொட்டை. பார்ப்பவர்களெல்லாம் பரிதாபப் படுவார்கள். நான் சிரிப்பேன். சிரிப்பேனா? அத்தனை மன பலம் உண்டா எனக்கு? ஒருவேளை அழுதுவிடுவேனோ? கண் தெரியாமல் முன்னும் பின்னும் தடவிக்கொண்டு கிருஷ்ணா, ராமா, கோவிந்தா!

மேலே உத்தரக் கட்டை எதற்குப் போட்டிருக்கிறார்கள்? தூக்கு மாட்டிக் கொள்ளத் தான்! சங்கரனுடைய உறவுக்காரன் ஒருத்தன் அப்படித்தான் செத்தான். கேசவப் பிள்ளையும் அப்படித்தான் செத்தார்! ஆனால் அவருக்குக் காத்தியாயினி இருந்தாள்.

நீளக் கயிறாக எடுத்துக்கொள்ள வேண்டும். என்னைத் தாங்க அதற்குப் பலம் வேண்டும். தூக்குப் போட்டுக் கொள்வதை யார் கண்டு பிடித்தார்கள்? உயிர் போகிற வரையிலும் எனக்கு உறுதி இருக்குமா? நடுவில் சத்தம் போட்டுவிடுவேனோ? ரயிலடியில் தலையைக் கொடுக்கப் பயம். சாகும்போது எல்லோரும் பார்ப்பார்கள்.

ரோஜாப் பூவைப் பக்தியோடு கண்ணில் ஒற்றிக்கொள்வதுபோல மெதுவாக அணைத்து நெஞ்சோடு இறுக்கிக் கொள்ள வேண்டும். இழுத்து அணைத்திருக்கிற என் கைகள் மெதுவாக மெதுவாக முதுகோடு கீழே இறங்குகின்றன. இழுத்து அணைக்கிற வெறியில் மார்பு என் நெஞ்சத்தைத் துளைத்துவிடும் போலிருக்கிறது. கால்கள் பிணைந்து தவிக்கிற தவிப்பில் நான் செத்துப் போய் விடுவேன் போலிருக்கிறது.

பக்கத்துக்கு முப்பத்திரண்டு வரிகள். வரிக்கு மூன்று வார்த்தைகள். படத்தைப் பாரு! தட்டை தட்டையாக மரப்பாச்சி மூஞ்சி. இந்த வாரம் நீச்சலுடை. அடுத்த வாரம் கோவிலுக்குப் போகிற பத்தினி.

பூவரச மரக் காடு. அங்கே, கழுதை, பன்றிகளின் விளையாட்டு. குறவர்களின் உல்லாசம். எலியை வேகவைத்துத் தின்பார்கள். யானையைத் தின்ன வேண்டும். அதனுடைய தந்தம் எனக்குக் கொம்பாய் முளைக்கும். ஒதெல்லோவுக்குக் கொம்பு முளைக்குமென்று பயம். அதனால்தான் டெஸ்டமோனாவைக் கழுத்தை நெரித்துக் கொன்றான்.

பின்னை மேட்டில் தான் செத்துப் போன சின்னக் குழந்தைகளைப் புதைப்பார்கள். குளத்தில் அலை மோதுகிற வெள்ளம், பின்னை மேட்டை மட்டும் மூழ்கடிக்காது. அப்புறம் ஊரே மூழ்கிப் போகும்.

நான் சுடுகாட்டுக்குப் போனேன். பக்கிரி வந்தான். செத்துப்போன வரதய்யருக்கும் பக்கிரிக்கும் என்ன சம்பந்தம்? எல்லாம் முடிந்த பிற்பாடுதான் அவன் போனான். அவனைப் பார்த்து எல்லோரும் சிரித்தார்கள். நானும் தெருவில் பார்க்கிற பிரேத ஊர்வலங்களோடு போய் எல்லாம் முடிகிற வரை இருக்க வேண்டும்.

கிழிசலும் அழுக்குமாய், உடம்பெல்லாம் சுற்றிக் கொண்டு தெருவிலே கண்டபடி சுற்ற வேண்டும். மடாதிபதிகள் மாதிரிப் பொன்னுடையும் கிரீடமுமாய் தங்கப் பல்லக்கில் வரவேண்டும். என்னைச் சுற்றி நின்று எல்லோரும் ஒப்பாரி வைப்பார்கள். என் மகன் தீச்சட்டி பிடிப்பான். மகனா? கல்யாணம் ஆவதற்கு முன்பா? எனக்குக் கல்யாணம் ஆகவில்லை என்று யார் சொன்னார்கள்? 'உன்னை எவள் கட்டிப்பாள்?' என்று நளினி கேட்டுவிட்டால் ஆயிற்று?

'உன்னை எவன் கட்டிக்கொள்வான்?

உன்னை எவன் கட்டிக்கொள்வான்?

உன்னை எவன் கட்டிக்கொள்வான்?'

தெருவில் போகிறவன் எல்லாம் என் பெண்டாட்டிதான், அப்புறம் என்ன செய்வாய்?

இங்கிலீஷ் சினிமாவில் வருகிற மாதிரி முத்தமிடுவேன். அப்படியே கட்டித் தழுவி.. கித்தனூர் கதா காலட்சேபம்... என். எஸ். கிருஷ்ணன் ரஷ்யாவுக்குப் போனார். நான் ரஷ்யாவில் இருந்தால் ராக்கெட்டில் போவேன். சந்திரனில்தானே அமைதி?

உன் மடிதான் எத்தனை இதமாக இருக்கிறது? உன் உடல் பூக்களால் ஆனதா? உன் முகத்தை இந்தச் சந்திர ஒளியில் பார்த்துக்கொண்டே இருக்க அதில் என்னென்னவோ தோன்றுகிறதே! என் கையை நீட்டி உன் கழுத்தை இதமாக அணைக்க, நீயும் என் உதடுகளைக் குறி வைத்துக் குனிகிறாய். என்

அமுல் அளிக்கும் புதுமை!

# அமுல்ஸ்ப்ரே

## புரதச் சத்துச் செறிந்த குழந்தை உணவு




உடல் வளர்ச்சிக்கான
புரதம் இதைவிட
<u>அதிகமாக</u> அடங்கிய
பாலுணவு வேறில்லை!





**கரைய 20 விநாடிகள் கூட ஆகாது . . . ஜீரணிக்க எளிது.**

ஏழு மடங்கு எடை ஏறும்படி, முதல் இரு ஆண்டுகளில் உங்கள் குழந்தை அதிவேகமாக வளரும்; அதற்கு பெருமளவிலும் ஆதாரம்: புரதசத்து. உடல் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதத்தை உங்கள் குழந்தைக்கு அளிக்கிறது அமுல்ஸ்ப்ரே.

**வைட்டமின்கள், வேறு பல நல்லன எல்லாமடங்கியது.**

அவசியமான வைட்டமின்களும் அடங்கப் பெற்றது அமுல்ஸ்ப்ரே. கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச் சத்து, உலோக தாதுக்கள், குழந்தையின் வளர்ச்சிக்குரிய இதர ஊட்டப் பொருள்கள் யாவும் உகந்த விகிதங்களிலே பொருந்தப் பெற்றது அமுல்ஸ்ப்ரே. நியாஸின், சோடியம் ஐயோடைட், ஃபாலிக் அமிலம் ஆகியவையும் இயல்பான வடிவிலே இடம் பெற்றுள்ளன.

**ஜீரணிக்க எளிது.**

ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் கையாளப்படும் ஸ்ப்ரே-ட்ரை செய்முறை மூலம் ஆக்கம் பெறுகிறது அமுல்ஸ்ப்ரே. உயரிய ஜீரணத் தன்மையை அளிக்கிறது அம்மேலான முறை; பாலின் புரதச் செறிப்பையும் பண்பையும் மேம்படப் பாதுகாக்கிறது.

**அற்புதமாகக் கரையும்:**

விழுது குழைக்கத் தேவையில்லை. முழு அளவு வெந்நீரிலே அமுல்ஸ்ப்ரே சேர்த்து, நன்கு கலக்கினால் 20 விநாடிகள் ஆவதற்குள் தயார். கட்டியும் துகளும் அடைத்துக் கொள்ளாது.

**உங்கள் குழந்தைக்கு உகந்தது அமுல்ஸ்ப்ரே!**



அமுல்ஸ்ப்ரே 500 கிராம் டப்பாக்களில் வருகிறது. (1 பவுண்டுக்கு 46 கிராம் அதிகம்).

ASP/AS-1/67-TM

ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட்.

கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோவாப்பரேடிவ் மில்க் ப்ரொட்யூசர்ஸ் யூனியன் லிமிடெட், ஆனந்த்.
சென்னை, கேரள, ஆந்திர மாநிலங்களில் விநியோகிக்கப்படுகிறது

# B·I



# S. S. ரஜூலா

**சென்னையிலிருந்து**

**1967 ஜூலை 29** | **1967 ஆகஸ்டு 22**

***சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.***

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**

**7. அரமனைக்காரத் தெரு. சென்னை -1**

***அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம்பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்***

**C. M. குட்டி**
*புரொப்ரைட்டர் : குட்டி டிராவல் ஸர்வீஸ்*
**38, அங்கப்ப நாயக்கன் தெரு**
**சென்னை -1**

**மெஸர்ஸ் கேரளா டிராவல்ஸ்**
**மாஸ்காட் ஹோட்டல்**
**திருவனந்தபுரம்**

**நாகப்பட்டினத்திலிருந்து**

**1967 ஜூலை 30** | **1967 ஆகஸ்டு 23**

**நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக்கொள்ளலாம்**

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**

**முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்**

பினாங்கு, போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

**பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விபரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும் :**

**பின்னி & கம்பெனி லிமிடெட்**
**7. அரமனைக்காரத் தெரு. சென்னை-1**

**மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.**
**முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்**

**ஏஜண்டுகள் : பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்**

மூச்சு எத்தனை வெப்பம் பார்த்தாயா? வா... ம்..... மீறும்.....நீதான் என்.....நீதான் எல்லாம்...நீதான்... நீ...நீ...

ஓ.... ஒப்பாரி வைத்துக் கதற வேண்டும் மண்ணில் விழுந்து புரள வேண்டும். ஆடை யெல்லாம் பிறரை ஏமாற்ற...டர்ர்...டர்ர்!

''அம்மாஞ்சி, சாதம்!'' அறைக் கதவு இலேசாகத் திறக்கிறது. ஒரு கை, பிசைந்த சோறு வைத்த தட்டை உட்புறம் நீட்டித் தரையில் வைக்கிறது. மறுபடியும் கதவு சாத்திக் கொள்கிறது.

''சாரதா'' என்று கத்துகிறேன்.

''என்ன அம்மாஞ்சி?'' வெளிறிய அவள் முகம் ஜன்னல் வழியே தெரிகிறது.

ஜன்னலருகே செல்கிறேன். இந்தப் பெண்ணை நேற்றைக்கு — நேற்று என்றால் நேற்று — அல்லது நாளை — கடைக்குக் கூட்டிப் போய் மிட்டாய் வாங்கிக் கொடுத்திருக் கிறேன். இன்று புடவை கட்டிக் கொண் டிருக்கிறாள்.

''என்னிடம் சொல்லாமல் ஏன் புடவை கட்டிக் கொண்டாய்?... போய்க் கவுன் போட்டுக்கொள், ம்.... போ!''

''ஆகட்டும் அம்மாஞ்சி!'' என்று முனு முனுக்கிறாள் அவள். கண்களிலிருந்து ஏனோ கண்ணீர் கொட்டுகிறது.

''என்னைப் பார்த்தால் உனக்குப் பயமா யிருக்காம்மா?'' என்கிறேன்.

இல்லையென்று தலையசைத்துவிட்டு விம்மிய வாறே ஓடுகிறாள் அவள். எனக்குச் சிரிப்பு!

சோற்றுத் தட்டைப் பார்க்கிறேன். இதில் எத்தனை பருக்கை இருக்கும்? நிதானமாய்த் தரையில் கொட்டிக் கொண்டு எண்ண வேண்டும். சோற்றுப் பருக்கையைப் பசை மாதிரி உபயோகிக்கலாம். என்னைத் தரை யோடு ஒட்டிக் கொள்ளலாம். அப்புறம் நான் மண்ணோடு மண்ணாகிப் போவேன். மண் ணுக்குள் பொன் இருக்கு. பொன்னுக்குள் பூனை இருக்கு. பூனைக்குள் புனுகு இருக்கு. புனுகு சவ்வாது, அத்தர்... அப்பா! ராவுத் தர் பக்கத்தில்தான் என்ன மணம்! இல்லை — நளினியோ, சந்திராவோ! சந்திராவுக்கு அபார்ஷன் ஆயிற்று. அந்தக் குழந்தை நான் தான். பிறக்காமலே பிறந்த குழந்தை.

நூலைச் சுற்றுகிற மாதிரி உன் உடம்பைச் சுற்ற வேண்டும். வீட்டுக்கு வருவதும் போவதுமாய் இருந்து, கடைசியில் எனக்கே துரோகம் செய்வாய் என்று கண்டேனா?

''ராகவா!'' என்று நீ கூப்பிடவும் — இது தான் அன்பு சொட்டக் கூப்பிடுகிற லட் சணமோ? இப்படிப் பேசித்தானே என்னை ஏமாற்றினாய்? ஜன்னல் பக்கம் வந்தேன்.

''சீனு! என்னை ஏன் இந்த அறையில் பூட்டி வச்சிருக்கேள்? காலேஜுக்குப் போக வேண் டாமா? என்னைத் திறந்து விடச் சொல்ல மாட்டியா?''

''ஏன் தலையைக் குனிந்து கொள்ளுகிறாய்? கண்ணீர் சொட்டுகிறதே உன் கண்களி லிருந்து!''

குரல் கம்ம, ''இப்பக் காலேஜுக்கு ஒண்ணும் அவசரம் இல்லை ராகவா! நீ ரெஸ்ட் எடுத்துக்க!'' என்கிறாய்.



''நானும் பத்து வருஷமா பாக்கறேன், இதே மாதிரி தான் எப்பவும் நடந்து போறாங்க.... ரொம்ப ஆப்த நண்பர்கள் போல இருக்கு!''

''சரி தான் அவங்களிலே ஒருத்தர் ஏன் உயரவே யில்லே என்கிறதுக்குக் காரணம் புரியுது!''

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

''ரெஸ்டு என்ன ரெஸ்டு? சாவுதான் ரெஸ்டு. எனக்குச் சரியாகச் சோறுகூடக் கெடைக்கிறதில்லே!''

''அப்படியெல்லாம் சொல்லக்கூடாது! இந்தப் பாரு! எனக்குக் கல்யாணமாகி இப் பத்தான் ஒன்னைப் பாக்க என் மனைவியோடு வந்திருக்கேன்!''

இது மண்டபத்தில் ஏறியதும் எனக்கு மகிழ்ச்சி பிறந்திருந்தது. ''டேய், டேய்! சீனு! ஓஹ்ஹோ!... கல்யாண ஊர்வலம் வரும். மகிழ்ந்து நான் ஆடுவேன்... டேய்...என் னைக் கல்யாணத்துக்குக் கூப்பிடாம ஏமாத் திட்டியே...!''

கண்களில் நீர் பொங்க அவன் நிற்கிறான்.

இடமிரண்டு எனக்கொன்று நினைவு வரு கிறது. ''டேய்... ஆமாம், முன்னே ஒரு தடவை சொல்லி யிருக்கிறியே! எங்கிட்டக் கேட்டுண்டு எனக்குப் பிடிச்சிருந்தாத்தான் கல்யாணம் பண்ணிப்பேன் அப்படின்னு! எங்கே, ஒம் பெண்டாட்டியை இப்பவாவது காட்டு பார்க்கலாம்!''

சீனு கண்களைத் துடைத்துக் கொண்டு அவன் மனைவியை ஜன்னல் பக்கம் அழைத்து வருகிறான். இவள்....இவள்....?

''ஓ....ய்.... டாய், சீனு... இவள் என் நளினி....''

சீனுவின் முகம் விகாரமடைகிறது. உதடுகள் துடிக்கின்றன. தலை அசைகிறது. விதிர்விதிர்த்துப் போனவனாய்.... ''இல்லை ராகவா, இது நளினி இல்லே, இவ விமலா...!'' என்று பதறுகிறான்.

பொய்.... உண்டு.... கருமை உடை.... உன் கதையெல்லாம் ஒழித்து விடுகிறேன்.... பொய் பொய்.... பொய்....




* பஸ் டிக்கட்டில் "குறள்"
* புளியின் துணி
* வேல் பாய்ந்தது
* கசப்பு மருந்து
* சிறுவர்களின் மகிழ்ச்சி

தமிழக அரசு, பஸ்களில் திருக்குறள் பொறிக்கப் போவதை அறிந்து மகிழ்ச்சி அடைந்தேன். பஸ்களில் குறள் பொறிப்பதைத் தவிர பஸ் டிக்கெட்டிலும் குறள் அச்சடித்தால் மிகவும் நன்றாயிருக்கும். தற்பொழுது பஸ்களில் கொடுக்கப்படும் சிறிய அளவுள்ள டிக்கெட்டுக்குப் பதிலாகப் பெரிய அளவுள்ள டிக்கெட் கொடுத்தால் அதில் குறைந்தது ஐந்து குறள்களையாவது பிரசுரிக்க முடியும். இதற்கு அதிகாரிகள் ஆவன செய்வார்கள் என்று நம்புகின்றேன்.

சென்னை—5
6—7—67 ஈ. ராஜு

* * *

"புளி வருகிறது" கட்டுரை சுவையாக இருந்தது.

புளியம் விதைகளை அரைத்துக் கூழாக்கி அதைக் கொண்டு கூடைகள் செய்கிறார்கள். இப்பழக்கம் தென்னகத்தில் இன்றும் பல இடங்களில் நிலவுகிறது.

யார் கண்டது, என்றாவது ஒரு நாள் ஒரு விஞ்ஞானியின் கடும் உழைப்பு காரணமாக டெரிலீன் நூல் இழை போல் புளியின் துணி வகைகள் உருவாகலாம்!

கட்னி,
28—6—67 வி. எஸ். ராமன்

* * *

"புள்ளெனப் பறந்த பத்மா" என்ற உண்மைக் கதையைப் படித்தேன். படித்துக் கொண்டு வரும்போதே என் இதயத்தில் பழுக்கக் காய்ச்சிய வேல் பாய்ந்த உணர்ச்சி உண்டாயிற்று. பத்மாவின் மறைவு, என்னையும் அறியாமல் கண்ணீரைத் தருவித்து என்னை மேலே படிக்கவிடாமல் தடுத்தது.

மதுரை,
28—6—67 மு. காளிமுத்து

அதிகமான அறிவையும், ஆற்றலையும் பெற்றுள்ள உயிரை இறைவன் தூண்டிற் புழுப்பதைப் போல் எவ்வளவு விரைவாகப் பறித்து விடுகிறான்?

பெரம்பலூர்
30—6—67 கே.எஸ்.ஆர். கோபாலன்

பெற்றோருக்கு நமது அனுதாபம் சொல்லவும்.

ஈரோடு
1—7—67 கே. எஸ். பாலசுப்பிரமணியன்

* * *

'என் அமைதியின்மை'க்குக் காரணம் கட்டுரை கண்டேன். டாக்டர் ராம் மனோகர் லோஹியாவின் கட்டுரையும் அது பற்றி ராஜாஜி அவர்களின் கருத்தும், தேசிய வாழ்வின் பல உள்ளுணர்வுகளை வெளிப்படுத்தின. ராஜாஜி அவர்களும் டாக்டர் லோஹியாவும் காந்திஜியோடு நெருங்கிய தொடர்புகொண்டவர்கள் என்பதால் மட்டுமல்ல — பொது வாழ்வில் தூய்மையாகவும் எளிமையாகவும் இருக்க வேண்டும் என்பதில் ஒன்று பட்டவர்கள் என்பதாலும் அல்ல — இந்த இருபெரும் தலைவர்களும் இந்த நாட்டிலேயே சிந்தனை உள்ளவர்களாகத் தனித்த தன்மை பெற்றிருக்கிறார்கள் என்ற காரணத்தினால் இவர்களது இந்தச் சந்திப்பு சரித்திரத்தில் இடம் பெறும்.

வைஞ்சனூர்
29—6—67 கு. செங்கோட்டையன்

ஸ்ரீ லோஹியாவின் அமைதியின்மைக்கு ராஜாஜி கொடுத்த மருந்து அமைதியின்மையைத் தீர்ப்பதோடு, சிந்தனை சக்தியைத் தூண்டும் வலிமையையும் கொடுக்க வல்லது.

பொதுவுடைமைவாதிகளுக்கு இந்த மருந்து கசப்பாகவும், வெறுப்பாகவும்தான் இருக்கும். ஆனால் ஜனநாயகத்தில் நம்பிக்கையுள்ள கட்சிகள் அனைத்தும் இம்மருந்தை உட்கொண்டுதான் தீர வேண்டும்!

மதுரை — 12
30—6—67 சித்ரா மணியன்

* * *

"சூரன்பீட்டர்" சித்திரக் கதை (வால்ட் டிஸ்னி) அற்புதமானது. பீட்டரையும் அவனது தோழர்களையும் மறக்கவே முடியாது. திடுக்கிடும் சம்பவங்களையும் வேடிக்கையான சம்பவங்களையும் கொண்ட சூரன் பீட்டர் கதை எல்லாரும் ரசித்த ஓர் அருமையான படைப்பு. குட்டித் தேவதையின் அற்புத மகிமையைச் சிறுவர்கள் மகிழ்ச்சியோடு ரசித்தார்கள்.

நாயக்கன்பாளையம்
29—6—67 கே. வைகுண்டராமன்

* * *

'மின்னல் தாக்குதலும் மகத்தான வெற்றியும்' என்ற கட்டுரையைப் படித்தேன். சில ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த இந்திய—சீனப் போர் நினைவுக்கு வந்தது. இஸ்ரேலிய பாதுகாப்புத் துறை அமைச்சர் திரு தயானையும், நமது முன்னாள் பாதுகாப்புத் துறை அமைச்சர் திரு கிருஷ்ணமேனனையும் ஒப்பிட்டுப் பார்த்து விசனித்தேன்.

சென்னை—33
1—7—67 கே. தாமோதரன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

# கேசம் உதிருகிறதே என்ற கவலையா?

## இன்றே ஸில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்கி உங்கள் கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்

**இந்த அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்.**

கேச உதிர்வு, உச்சந்தலையிலே தினவு, நார்போல் வரண்ட உரோமம். உங்கள் கேசத்திற்கு உகந்த ஊட்டமில்லை என்பதற்கான அறிகுறிகள் இவை. ஊட்டமின்மைதான் இளமையிலேயே வழுக்கை விழக் காரணமாகிறது. அந்த ஊட்டமின்மைக்கு உரிய நிவாரணம் ஸில்விக்ரின்—கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

**ஸில்விக்ரின் எப்படி வேலை செய்கிறது.**

18 அமினோ-அமிலங்களை உங்கள் கேசத்திற்கு உணவாக அளிக்கிறது இயற்கை. இந்த அமினோ—அமிலங்கள் எல்லாமே அடர்வாக ஒன்று சேர்ந்த வடிவில் கிடைக்கச் செய்வது ஸில்விக்ரின் ஒன்றே. அது வேகமுடன் மயிர்க்கால்களை ஊடுருவி, ஊட்டமளித்து உரமேற்றி, பாங்கான கேச வளர்ச்சியை ஊக்குவிக்கும்.

**உபயோக விதிமுறைகள்:**

உங்கள் உச்சந்தலைமீது அன்றாடம் இரு நிமிட நேரம் ப்யூர் ஸில்விக்ரின் தேய்த்திடுங்கள். கேச நிலை அபிவிருத்தி அடையும் வரை உபயோகியுங்கள் ப்யூர் ஸில்விக்ரின். கேச நலம் மீண்டு விட்டதென்றால் அதன் பின் கேச நலனைக் காத்துக் கொள்ளத் துணை புரிவது ஸில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்-ப்யூர் ஸில்விக்ரின் அடங்கிய, எண்ணெய் அடிப்படை கொண்ட லோஷன்.

ஆல் அபௌட் ஹேர் (All About Hair) என்ற புத்தகத்தின் இலவசப் பிரதியைப் பெற, எழுதுங்கள்: டிபார்ட்மெண்ட் K-1, தபால் பெட்டி 727, பம்பாய்-1.




ஸில்விக்ரின் தயாரிப்புகள்—ஆடவர், பெண்டிர் யாவரும் உபயோகிக்கத் தக்கவை.

**ஸில்விக்ரின்**

கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு

L*C-Alyars S, 1 TAM

REGISTERED No. M. 4292
Registered as a Newspaper in Ceylon




# பனாமா
## ஒரு நல்ல சிகரெட்











கோல்டன் டொபாக்கோ கம்பெனி பிரைவேட் லிமிடெட், பம்பாய்-56
பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது

GT (P) 634-C Tam Grants' Advtg